# ஏழு தலையான பாவங்கள்

ஆங்காரம்

உலோபித்தனம்

மோகம்

கோபம்

போசனப் பிரியம்

காய்மகாரம்

சோம்பல்

# ஏழு
# தலையான பாவங்கள்


Nihil Obstat: William J. Blacet, J.C.L.
Censor Librorum.

Imprimatur: John P. Cody, S.T.D.
Bishop of Kansas City
-St. Joseph.
July 16, 1959.

Published on 15th November, 2008,
the Feast of St. Albert the Great.

Published by:
Mr. Alfredo Salazar,
Friends of the Cross,
U.S.A.





Printed in India.

# ஏழு

# தலையான பாவங்கள்

*...மாம்சத்தோடும், இரத்தத்தோடும், துரைத்தனங்களோடும், வல்லமைகளோடும், இந்த அந்தகார உலகாதிபதிகளோடும், ஆகாச மண்டலங்களிலுள்ள அக்கிரம அருபிகளோடும் நாம் போராட வேண்டியிருக்கிறது. இதின் நிமித்தம், பொல்லாத நாளிலே அவைகளை எதிர்த்து நிற்கவும், எல்லாக் காரியங்களிலும் நீங்கள் உத்தமராய் நிலைநிற்கவும் திராணியுள்ளவர்களாய் இருக்கும்படி சர்வேசுரனுடைய போராயுதங்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஆதலால் நிலைமையாய் நின்று, சத்தியத்தில் உங்கள் இடையை வரிந்து கட்டுங்கள்; நீதியின் மார்க்கவசத்தைப் பூண்டு கொள்ளுங்கள். சமாதான சுவிசேஷத்துக்கு ஆயத்தமாகிய பாதரட்சையைத் தொடுத்துக் கொள்ளுங்கள். கொடுங்கொடியோன் எய்யும் அக்கினியாஸ்திரங்களை எல்லாம் அவித்துப் போடுவதற்கு வல்லவர்களாயிருக்கும்படிக்கு எல்லாக் காரியங்களிலும் விசுவாசக் கேடயத்தைப் பிடித்துக் கொள்ளுங்கள். இரட்சணியத்தின் தலைச் சீராவையும், தேவ வாக்கியமாகிய ஞான வாளையும் எடுத்துக் கொள்ளுங்கள்.*

*(எபே. 6:12-17).*

மன அடக்கமும், விழிப்பும் உள்ளவர்களா-யிருங்கள்; ஏனெனில் உங்கள் சத்துருவாகிய பசாசு கர்ச்சிக்கிற சிங்கத்தைப் போல யாரை விழுங்கலாமோவென்று தேடி சுற்றித் திரிகிறது. ஆகையால் விசுவாசத்தில் உறுதியுள்ளவர்களாய் அதற்கு எதிர்த்து நில்லுங்கள். உலகத்திலுள்ள உங்கள் சகோதரர்களுக்கும் இவ்விதத் துன்பங்கள் உண்டென்று அறிந்து கொள்ளுங்கள். கிறீஸ்து சேசுவுக்குள் நம்மைத் தமது நித்திய மகிமைக்கு அழைத்தவராகிய சர்வ கிருபையுள்ள சர்வேசுரன் கொஞ்சங் காலம் துன்பப் படுகிறவர்களை உத்தமராக்கி உறுதிப்படுத்தி ஸ்திரப் படுத்துவார். அவருக்கே அநவரதகாலமும் மகிமையும் இராச்சிய பாரமும் உண்டாவதாக. ஆமென்.

*(1 இரா. 5:8-11).*



# இன்று எனது பிரதிக்கினை

*தீமையை எதிர்த்து நின்று, நன்மை செய்யவும்,*

*என் ஜீவியத்தின் அந்தஸ்திற்குரிய பொறுப்புகள் அனைத்தையும் பிரமாணிக்கத்தோடு நிறைவேற்றவும்,*

*என் அயலார்களோடு எனக்குள்ள அனைத்து தொடர்புகளிலும், உறவுகளிலும் இரக்கத்தையும், நேர்மையையும் கடைப்பிடிக்கவும்,*

*என் ஆத்துமத்தை முழுமையான பரிசுத்ததனத்தோடு காத்துக் கொள்ளவும் என்னால் ஆன அனைத்தையும் செய்வேன் என்று* **இந்த நாளில் நான் பிரதிக்கினை செய்கிறேன்.**

*தீமை செய்யும் படி நான் சோதிக்கப் பட்டால், என் இருதயத்தில், எது சரியோ, அதைச் செய்; சரியாக இரு; மகிழ்ச்சியாயிரு என்ற வார்த்தைகளை அடிக்கடி சொல்லிக் கொள்வேன்.*

*இந்த எனது பிரதிக்கினைக்குப் பிரமாணிக்கமாய் இருக்க என்னால் இயலும்படி, என் சிருஷ்டிகராகிய சர்வேசுரனுடைய உதவியை இரந்து மன்றாடுவேன்.*

**பொருள் அடக்கம்** **பக்கம்**

**பொருள் அடக்கம்** **பக்கம்**

முன்னுரை

## ஏழு தலையான பாவங்கள்

நாம் ஒவ்வொருவரும், நம் வாழ்வு முழுவதும் எதிர்த்துப் போராட வேண்டிய, ஏழு தலையுள்ள ஒரு இராட்சத ஜந்து உள்ளது. சுய தேடல் அல்லது சுய நேசம் என்பது அதன் பெயர். ஆங்காரம், கோபம், மோகம், உலோபித்தனம், போஜனப் பிரியம், காய்மகாரம், சோம்பல் ஆகியவை அதன் ஏழு தலைகளாம். ஆயர் ஃபுல்ட்டன் ஷீன் அவைகளை, "ஆத்துமத்தின் ஏழு பிணந்தூக்கிகள்" என்று அழைப்பதோடு அவற்றிற்கு ஏழு பெயர்களையும் தருகிறார். அவை: சுயநேசம், பணத்தின் மீது ஒழுங்கற்ற நாட்டம், முறையற்ற காமம், வெறுப்பு, பொறாமை, முகஸ்துதி மற்றும் சோம்பல் ஆகியன ("Peace of Soul", p. 109).

ஜென்மப் பாவத்தின் விளைவாக, தன் சித்தத்தை வலியுறுத்துவதும், சகலத்திற்கும் மையமாகத் தன்னை ஆக்கிக் கொள்வதும், மற்றவர்களின் சித்தங்களைத் தனது சித்தத்தைக் கொண்டு அடக்கியாள்வதுமாகிய ஒரு துர்க்குணம் நம் ஒவ்வொருவரோடும் ஒட்டிப் பிறந்ததாக இருக்கிறது. அனைத்திலும் உன்னதமான நன்மையையே நாம் மிகவும் நாடுகிறோம். ஆனாலும் பெரும்பாலும் இந்த நன்மை எதுவென்று நமக்கு விளங்குவதில்லை. மேலும் ஒரு தவறான வழியில் நாம் அதைத் தேடியலைகிறோம். சர்வேசுரனே அனைத்திலும் உயர்ந்த நன்மைத்தனம் என்பதை நாம் புரிந்து கொள்வது அவசியம். அவர் தம்மையே நமது இறுதிக் கதியாகவும், உன்னத சன்மானமாகவும் ஆக்கி வைத்திருக்கிறார். "நானே வழி" என்று தம்மைப் பற்றி அறிவித்த கிறீஸ்துநாதரின் வழியாக அவரை அடையும் வழியை அவர் நமக்குக் காட்டியுள்ளார்.

சர்வேசுரனுடைய சிருஷ்டிகள் என்ற முறையில்

அவரோடு நமக்குள்ள உறவை நாம் அடையாளம் கண்டு கொள்ள வேண்டும். மோட்சத்தில் அவரைச் சொந்தமாகக் கொண்டிருப்பதற்கு, அல்லது, நாம் வழக்கமாகக் கூறுவது போல, நம் ஆத்துமங்களைக் காத்துக் கொள்வதற்கு, அவர் சித்தங் கொள்ளுகிறபடியும், ஆசிக்கிறபடியும் அவரை நேசித்து, அவருக்கு ஊழியம் செய்ய நாம் கடமைப் பட்டிருக்கிறோம். இனி, நாம் நமது சொந்த கர்வ சிந்தனையால் சூழப் பட்டிருக்கும் போது, நாம் சிந்திக்கிற, சொல்கிற, செய்கிற எல்லாமுமே நம் சுயத்தைச் சுற்றியே இயங்குகிறது. ஆயினும் இதை நாம் உணர்வதில்லை. கிறீஸ்துநாதரைக் கண்டுபாவிக்கிறவர்கள், சர்வேசுரனைத் தேடுகிறவர்கள் என்று நம்மைப் பற்றி நாமே சொல்லிக் கொண்டாலும், அதையே நாம் நம்ப முயற்சித்தாலும் கூட, நாம் நிஜத்தில் சுயநலவாதிகளாகவே இருக்கிறோம்.

சுய தேடலுக்கு எதிரான போராட்டம் நம் சொந்த ஆளுமைக்கு உள்ளேயே நிகழ்கிறது. குறிப்பாக, அது நம் சித்தத்தில் நிகழ்கிறது. சுய நேசம் மற்றும் சுய சித்தம் ஆகிய இந்த ஊற்றுக்கண்ணில் இருந்துதான் ஆங்காரமும், மற்ற தலையாய பாவங்களும் பிறந்து வருகின்றன. அங்கேதான் அவை பெரியதும், சிறியதுமாகிய தீமைகளின் ஒரு பெரும்படையைக் கருத்தாங்கிப் பெற்றெடுக்கின்றன. இந்தச் சுய தேடலே நம்மைப் பலமாகப் பற்றிப் பிடித்து நடத்துகிற உந்து சக்தியாக இருக்கும் போது, நம் ஆண்டவர் கற்பித்தபடி, நம்மை நாம் மறுதலிப்பது பெரும்பாலும் இயலாத காரியமாக இருக்கும். நம்மை நாம் மறுதலிப்பதற்கு, தேவ சிநேகம், பிறர் சிநேகம், பரித்தியாகம், தாழ்ச்சி, கீழ்ப்படிதல், பொறுமை, தாராள குணம், இன்னும், கடமையும், புண்ணியமும் எவற்றையெல்லாம் கடைப்பிடிக்க நம்மைத் தூண்டுகின்றனவோ, அவை அனைத்தையும் கடைப்பிடிப்பது அவசியம். இதற்குப் பதிலாக நம் சுய நேசமானது

நம்மில் உள்ள துர்க்குணங்களைச் சீராட்டி வளர்க்கிறது. நாமும் தொடர்ந்து அவற்றின் கண்ணிகளில் அதிகமதிகமாக சிக்கிக் கொள்கிறோம்.

சுய நேசத்தின் பாதையிலேயே தொடர்ந்து செல்வது, சர்வேசுரனுடைய சிநேகத்தைத் தொடர்ந்து மறுதலிப்பதற்கு ஒப்பாகும். இத்தகைய ஒரு பாதை இரட்சணியத்திற்கு மிகவும் ஆபத்தானது. ஒரு ஆத்துமம் சுய நேசம், சுய சித்தம் ஆகியவற்றிலிருந்து சுத்திகரிக்கப்பட்டு, சர்வேசுரனுக்காக மட்டுமே ஜீவிக்கவில்லை என்றால், அதாவது, அது அர்ச்சிக்கப்படவில்லை என்றால், அது மோட்சத்திற்குள் நுழைவது மிக அரிது. இரட்சிக்கப் படுகிறவர்களில் அநேகருக்கு இந்த சுத்திகரிப்பில் பெரும்பகுதி உத்தரிக்கிற ஸ்தலத்தில் செய்யப்பட வேண்டியிருக்கலாம். ஏனெனில் அவர்களுடைய ஆத்துமங்கள் இந்த உலகத்தில் சுய மறுதலிப்பைக் கொண்டு தங்களைச் சுத்திகரிக்காமல் இருக்கலாம். ஆனால், நாம் சாகும் வரையிலும் தேவ சித்தத்தை மறுத்து நம் சுய சித்தத்தையும், சுய நேசத்தையும் மட்டுமே தேடுகிறவர்களாக இருந்தால், நித்தியத்திற்கும் நம்மை மறுதலிக்கும்படி சர்வேசுரன் தூண்டப்படுவார். ஏனெனில் நாம் அவரை மறுதலித்திருக்கிறோம். இத்தகைய ஒரு மறுதலிப்பு நித்திய ஆக்கினையேயன்றி வேறல்ல. அதன் பின் நம் நிலை எப்போதும் சுய நேசத்திலும், சர்வேசுரனின் மீதான வெறுப்பிலும் ஊன்றியிருக்கும். நரகத்தில் நாம் முழு மூடர்களாய், நம்மையே மையமாகக் கொண்டிருப்போம். இத்தகைய ஒரு ஆங்கார மனோபாவம் முடிவேயில்லாத ஒரு தாங்க முடியாத வாதைக்கு முழுவதும் தகுதியுள்ளதாக இருக்கிறது. இடையறாது கடவுளை நோக்கி ஈர்க்கப் பட்டாலும், நித்தியத்திற்கும் தன்னோடு ஒன்றித்திருக்கிற கடவுளின் மீதான வெறுப்பு, அவருக்கும் அந்த ஆத்துமத்திற்குமிடையே ஒரு சுவராக நின்று தடுக்கிற வாதைதான் அது.

ஏழு தலையான பாவங்களும் என்னென்ன மாறுவேடங்களில் மறைந்திருக்கின்றன என்பதைப் பற்றிய அறிவு, நம்மையே நாம் அறிந்து கொள்ள நமக்கு உதவக் கூடும். மேலும் அந்தப் பாவங்களுக்கு எதிரான புண்ணியங்-களைக் கடைப்பிடிப்பதன் மூலம், வெற்றிகரமாக அவற்றை எதிர்த்துப் போராடவும் அந்த அறிவு நமக்கு உதவுகிறது. நாம் அறியாத, நாம் காணாத, அல்லது நாம் நம் நண்பன் என்று நினைத்துக் கொண்டிருக்கிற ஒரு எதிரியோடு போர் தொடுப்பது என்பது இயலாத காரியம். இருந்தாலும் இந்த ஏழு தீமைகளின் விஷயத்தில், குறிப்பாக ஆங்காரம், சோம்-பல் ஆகியவற்றின் விஷயத்தில், நமக்கு இதுதான் நிகழ்கிறது.

தலையான பாவங்களின் இயல்பைப் பற்றி அறியச் செய்வதும், ஒரு குறிப்பிட்ட தலையான பாவத்தில் வேரூன்-றியுள்ள பல்வேறு செயல்பாடுகளில் சிலவற்றையாவது குறைந்தபட்சம் குறித்துக் காட்டுவதும்தான் இந்தச் சிறு நூலின் நோக்கமாக இருக்கிறது. இந்த ஏழு தீமைகளின் தன்மை, அவற்றின் பல்வேறு அளவுகள், மற்றும் அவை தங்களுக்குள் கொண்டுள்ள உறவுகளைப் பற்றிய இந்த அறிவு, இந்த விஷயத்தில் தங்களைத் தாங்களே பரிசோதித்துக் கொள்வதைக் கடினமாக உணர்கிறவர்களுக்கு உதவியாக இருக்கும் என்று நாம் நம்புகிறோம். ஏனெனில் ஆத்தும சோதனை என்பது பெரும்பாலும் நமக்கு இந்தத் தலையான பாவங்களின் பெயர்களை மட்டுமே தருகின்றது.

ஒரு பழங்கால எழுத்தாளர், அக்காலத்தின் உணர்-வைத் தமக்குள் கொண்டவராக, இந்த ஏழு தலையான பாவங்களை மிருகங்களின் வடிவங்களில் உருவகப் படுத்து-வதன் மூலம் அவற்றின் தீய தன்மையை நமக்குக் கற்பிக்கி-றார். ஆங்காரம் ஒரு சிங்கமாகக் காட்டப் படுகிறது. கோப-மானது, தன் மூக்கின் மீதுள்ள ஒற்றைக் கொம்பைக் கொண்டு தனக்கு எதிர்ப்படுகிற அனைத்தையும் முட்டுகிற ஒற்றைக்

கொம்பு மிருகத்தாலும் (unicorn), மோகம் தேளாகவும், உலோபித்தனம், நரியாகவும், போஜனப் பிரியம், பேராசையுள்ள பன்றியாகவும், காய்மகாரம் நச்சுப் பாம்பாலும், சோம்பல் கரடியாலும் குறித்துக் காட்டப் படுகின்றன.

"ஆங்காரம், திமிர், காய்மகாரம், கோபம், மற்றும் இந்த வேர்களிலிருந்து முளைத்து வளர்கிற எண்ணற்ற மற்ற பாவங்களுக்குரிய சோதனைகளை நம்மில் தூண்டுவது பசாசுதான்" என்று இதே எழுத்தாளர் கூறுகிறார். ஏனென்றால் துர்க்குணங்களின் பாவங்கள், குறிப்பாக மனத்தின் பாவங்களாக, அல்லது ஆன்ம பாவங்களாக இருக்கின்றன. அவை தங்களில் மற்ற பாவங்களை விட அதிக கொடியவைகளாக இருக்கின்றன.

நம் மாம்சமானது, மோகம், போஜனப் பிரியம், ஆத்துமத்தின் குளிர்ந்த நிலை, சுய பற்றுதல் ஆகியவற்றை நோக்கி இயல்பாக நம்மை ஈர்க்கிறது. இவை சரீரப் பாவங்களாக இருக்கின்றன. மனிதருடைய பார்வையில் இவை மிகக் கேவலமானவையாகவும், அவமானம் வருவிப்பவையாகவும் இருக்கின்றன.

இறுதியாக, சொத்துக்கள், செல்வச் செழிப்பு, மகிமை மற்றும் இன்னபிற திருப்திகளின் மீது பேராசை கொள்ளும்படி உலகம் நம்மைக் கட்டாயப் படுத்துகிறது. ஆனால் இவை வெறும் மாயத் தோற்றங்கள் மட்டுமே. நிழலானவைகளை நிஜமெனக் கருதி நாம் அவற்றை நேசிக்கும்படி இவை நம்மை வஞ்சிக்கின்றன. அசுத்த அரூபி ஒன்று ஒரு மனிதனை விட்டு வெளியேறி, வனாந்தரங்களில் தான் தங்குவதற்கு ஓர் இடம் தேடிச் சுற்றியலைந்து, அப்படியொன்றும் காணாமல், தன்னை விடக் கொடிய

வேறு ஏழு பேய்களைச் சேர்த்துக் கொண்டு அந்த மனிதனிடமே திரும்பி வந்த உவமையை (மத். 12:45) சேசுநாதர் கூறிய போது அவர் இந்த ஏழு தீமைகளையே மறைமுகமாகக் குறித்துக் காட்டினார்.

சுபாவத்தில், எவ்வளவு அடிக்கடி இந்தப் பாவங்களின் ஏதாவது ஒரு பாவத்தின் சோதனைக்கு நாம் சம்மதிக்கிறோமோ, அவ்வளவுக்கு ஆழமாக அந்தப் பாவம் நம்மில் வேரூன்றுகிறது. காலம் செல்லச் செல்ல, பாவப் பழக்கங்கள் நம்மில் தோன்றுகின்றன. அவற்றிலிருந்து தப்பிப்பது வெகு கடினமாகி விடுகிறது. நாம் தொடுக்க வேண்டிய பெரிய போராட்டங்களில் வெற்றி பெற வேண்டுமானால், சிறிய பாவங்களுக்கு எதிராகப் போராடுவதில் எப்போதும் நாம் விழிப்பாயிருக்க வேண்டும்.

*அத்தியாயம் 1*

# ஆங்காரம்

ஆங்காரமே முதலில் கட்டிக்கொள்ளப்பட்ட பாவம். அது லூசிபரின் பாவம். ஆதாம், ஏவாள் கட்டிக் கொண்ட ஜென்மப் பாவத்தின் வேராக இருந்ததும் இப்பாவமே.

பாவங்களில் மிகப் பெரியது ஆங்காரமே. ஏனென்றால் அது சுயநேசத்தின் சிகரமாகவும், சர்வேசுரனுக்குப் பணிந்திருப்பதற்கு எதிரானதாகவும் இருக்கிறது. எனவே அதுவே சர்வேசுரனால் அதிகம் வெறுக்கப்படும் பாவம். இந்தப் பாவத்தையே அவர் மிகக் கடுமையாகத் தண்டிக்கிறார். கெட்டுப் போன சம்மனசுக்கள், ஆதாம், ஏவாள், தானியேல் ஆகமத்தின் நபுக்கோதனசார் (4:27-30) ஆகியோர் தண்டிக்கப்பட்ட விதம் இதற்கு சாட்சியாக இருக்கிறது.

அவ்வாறே ஆங்காரம் சுய நேசத்தின் பிறப்பிடமாக இருப்பதாலும் அது மற்றவைகளை விடப் பெரிய பாவமாக இருக்கிறது. இந்த சுயநேசம்தான் மற்ற எல்லாப் பாவங்களுக்கும் வேராக இருக்கிறது. "சர்வ கேடுகளுக்கும் அஸ்திவாரம் ஆங்காரமே" (தொபி. 4:14). ஒரு பாவத்தின் தனிப்பட்ட இயல்பு எத்தகையதாக இருந்தாலும், ஒவ்வொரு பாவத்திலும் ஆங்காரம் கலந்துள்ளது.

ஆங்காரம் மிக ஆபத்தான பாவம். ஏனென்றால் அது நம் புத்தியைக் குருடாக்குகிறது. இறுதியாக ஏதாவது ஒரு காரியத்தால் சத்தியத்தைப் புரிந்து கொள்ளும்படி நாம் தூண்டப் படாவிட்டால், நாளுக்கு நாள் ஒரு ஞான சுய மாயைக்குள் நாம் தொடர்ந்து பயணித்துக் கொண்டேயிருப்போம். நமது சில பழக்கங்கள் தீயதாக இருக்கும்போதும், நம் செயல்கள்

நல்லவையாகவும், புண்ணியங்களாகவும் இருப்பதாக நாம் நினைத்துக் கொள்வோம். ஆங்காரத்தால் நாம் குருடாக்கப் படும்போது, நம்முடைய தாலந்துகளும் திறமைகளும் சர்வேசுரன் நமக்குத் தந்த கொடைகள் என்று நினைக்க மாட்டோம். அதற்குப் பதிலாக அவை நம்மிடமிருந்தே வந்தவை என்றும், அவற்றை நாம் விரும்புகிற விதத்தில் உபயோகிக்க நமக்கு உரிமையுண்டு என்றும் எண்ணுவோம்.

ஆங்காரத்தின் நோய்க்கிருமியால் தாக்கப்படாதவர்கள் யாருமில்லை! ஒவ்வொரு மனிதனிடமும் ஒரு குறிப்பிட்ட வகையான ஆங்காரம் உண்டு. அல்லது குறைந்த பட்சம் ஒரு குறிப்பிட்ட வகையான ஆதிக்க உணர்வு உண்டு. அதே தன்மையைக் கொண்டுள்ள அதன் நோய்க்கிருமிகள் வேறு சிலவும் அங்கே இருக்கக் கூடும். இந்த ஆங்காரமே நமது மனப்பாங்கின் தன்மையையும், நமது குணாதிசயத்தின் தன்மையையும் தீர்மானிக்கிறது. அல்லது குறைந்த பட்சம் அது நம் மனப்பாங்கோடு நெருங்கிய தொடர்புள்ளதாக இருக்கிறது. நம் தனிப்பட்ட ஆங்காரம் எப்படிப் பட்டது என்பதை அறிந்து கொள்ளத் தேடுவது மிக முக்கியமானது. அப்போதுதான் நம்மைப் பற்றிய உண்மையான அறிவை நாம் அடைய முடியும்; மேலும் நம் வாழ்விலிருந்து பாவத்தையும், துர்க்குணங்களையும் வேரறுக்க அவசியமான பலன் மிக்க முயற்சிகளை நாம் மேற்கொள்ளவும் முடியும்.

நம்முடையது **தன்னார்வ** மனப்பாங்காக இருக்குமா-னால், நம் ஆங்காரம் தன்னைத்தானே சகலத்திலும் மையமாக்கிக் கொள்கிறது. சக்கரத்தின் அச்சுக் குடமாக இருக்க நாம் விரும்புகிறோம். மற்றவர்கள் நம்மைக் கவனிக்க வேண்டுமென விரும்புகிறோம். முன்கோபிகளாகவும், சிறு அவமானத்தைக் கூட தாங்க முடியாதவர்களாகவும் இருக்கிறோம். ஆங்காரமானது புகழ், ஸ்துதி, பாராட்டுக்கள்

ஆகியவற்றைத் தேடுபவர்களாக நம்மை ஆக்குகிறது. வீண்மகிமைக்குள் நாம் விழுந்து விடுகிறோம்.

நம்முடையது **தன்னாதிக்க** மனப்பாங்காக இருக்குமானால், நம் ஆங்காரம் ஒரு பலமான சுய சித்தத்தில் வெளிப்படுத்தப் படுகிறது. மற்றவர்களுக்குப் பணிந்து போகவோ, அவர்களது கருத்துக்களை ஏற்றுக் கொள்ளவோ நமக்குக் கடினமாக இருக்கிறது. பெரும்பாலும் நாம் பிறரை அடக்கியாள விரும்புகிறவர்களாகவும், விமரிசன நோக்குள்ளவர்களாகவும், வீண்வாதத்தை விரும்புகிறவர்களாகவும் இருப்போம்; ஆதிக்க உணர்வால் ஆட்கொள்ளப் பட்டிருப்போம். பிறரின் உரிமைகளைப் பற்றி சிந்திக்க மாட்டோம்.

நாம் **சுய பச்சாத்தாபமுள்ள** மனப்பாங்கு உள்ளவர்களாக இருந்தால், நம் ஆங்காரம், சுய இரக்கம், அதீத உணர்ச்சி வசப்படுதல் ஆகியவற்றின் திரைக்குள் தன்னை மறைத்துக் கொண்டிருக்கிறது. சீற்றம், மனக்கசப்பு, காழ்ப்புணர்வு, சந்தேகம், வெளித்தெரியாத பகைமையுணர்வு ஆகியவை இந்த சுய இரக்கத்தோடு சேர்ந்த குணங்களாக இருக்கின்றன. இந்த ஆங்காரத்தை அடையாளம் காண்பது கடினம். ஏனென்றால் அது தன்னைத்தானே மறைத்துக் கொள்கிறது. எனவே, அதை ஆங்காரமென நாம் ஒத்துக் கொள்வதில்லை.

நாம் **செயலூக்கமில்லாத** மனப்பாங்கைக் கொண்டிருந்தால், சுய திருப்தியையும், ஆடம்பரத்தையும் தேடுமாறு நம் ஆங்காரம் நம்மை உந்தித் தள்ளுகின்றது. மற்றவர்களுடைய குறைகள் நமக்கு அதிர்ச்சியளிக்கின்றன. ஆனால் நம்மைப் பற்றியோ நாம் முழுத் திருப்தியுள்ளவர்களாக இருக்கிறோம்.

ஆதிக்கவுணர்வின் ஆங்காரம் மற்றவர்களின் வாழ்வை நம் கட்டுப்பாட்டில் கொண்டிருக்க வேண்டும் என்ற வெறியை

நம்மில் தூண்டுகிறது; நம் விருப்பங்களை அவர்கள் மேல் சுமத்தவும், அவர்களை ஆதிக்கம் செலுத்தவும் விரும்புகி-றோம். பிறர் தங்கள் அதிகாரத்தை வலியுறுத்தும் போது நம் சித்தம் உறுதியானதாகவும், வளைந்து கொடுக்காததாகவும் ஆகி விடுகின்றது.

சுய சித்தமும், பிடிவாத குணமுமே தேவ சித்தத்தை எதிர்ப்பவர்களாக நம்மை ஆக்கி விடுகின்றன. அவை நம் அயலானை எதிர்த்து நின்று, நம் சுய நேசத்தின் கட்டளைகளை நிறைவேற்றுவதில் யாருக்கும் அசைந்து கொடுக்காதவர்களாக நம்மை மாற்றி விடுகின்றன. கோபம், வெறுப்பு,கர்வம், முரண்படுகிற மனநிலை, திமிர் ஆகியவை இந்த வகை ஆங்காரத்தின் குழந்தைகளாகும். வழக்கமாக இந்த ஆங்காரம் தன்னிச்சையாக உறுதியான முடிவெடுக்கிற ஒரு மனத்தில் வேரூன்றியதாக இருக்கிறது. அறிவின் ஒளியையும், வெளிப்-படுத்தப்பட்ட விசுவாசக் கொள்கைகளால் எண்பிக்கப் படுகிற சத்தியத்தின் ஒளியையும் நாம் கண்டு கொள்ள முடியாமல் அது தடுத்து விடுகிறது. இந்த விருப்பமற்ற நிலை உண்மையில் அறியாமையை வளர்க்கிறது. திருச்சபைக்குள் நுழையாத படி மனிதர்களைத் தடுப்பதும் தங்கள் விசுவாசத்தை இழந்து வீழ்ச்சியடைந்த பிறகு, விசுவாசத்தை அவர்கள் மீண்டும் அனுசரியாதபடி தடுப்பதும் இந்த ஆங்காரமே.

இந்த வகை ஆங்காரத்தோடு மிக நெருக்கமாக இணைந்-திருக்கிற மற்றொரு ஆங்காரமுண்டு. அல்லது, இந்த வகை ஆங்காரத்திற்கு வேறு பெயர் உண்டு என்றும் நாம் கூறலாம். அது **சுதந்திர மனப்பாங்கு** ஆகும். கீழ்ப்படியாமை, அர்ப்பண மறுப்பு, பிறரை இகழ்தல், கர்வத்தோடு முரண்-படுதல், அறிவுரைகள், உதவிகளை ஏற்க மறுத்தல், உரிய அதிகாரத்தால் கண்டிக்கப் படுவதை ஏற்க மறுத்தல், தேவ தூஷணம், மனக்கசப்போடு சாபமிடுதல், ஆணையிடுதல்,

வார்த்தையிலும், செயலிலும் மரியாதையின்மை ஆகியவற்றை நோக்கி இது நம்மை வழிநடத்துகிறது.

நம் சொந்தக் குறைகளை ஒத்துக் கொள்ள மறுத்தல், போலித் தற்பெருமை, நம் மனம், நற்பண்புகளுக்கும், ஆளுமைக்கும், செல்வ வளத்திற்கும் சர்வேசுரனல்லாமல் நாமே காரணம் என்ற எண்ணம் ஆகியவை **அறிவின் ஆங்காரத்தை** வெளிப்படுத்துகின்றன. இந்த ஆங்காரத்தில் நின்றே விசுவாசத்திற்கு எதிரான பாவங்கள் எழுகின்றன.

**புகழார்வத்தின் ஆங்காரம்** மற்றவர்கள் எவ்வளவுதான் உயர்ந்தவர்களாக இருந்தாலும், அவர்களை விட நம்மை எந்த வகையிலாவது முன்னிலைப் படுத்துகிற உயர்பதவிகளையும், மாண்புள்ள அலுவல்களையும் நாம் தேடும்படி செய்கிறது. பெரும் அலுவல்களையும் திட்டங்களையும் எப்படி நிறை-வேற்றுவது என்று தெரியாத போதிலும், முன்யோசனை-யின்றி அவற்றைப் பொறுப்பேற்றுக் கொள்ள அது நம்மைத் தூண்டுகிறது. அதிகப்படியான தன்னம்பிக்கையின் காரண-மாக, நம் திறமைகளை நாம் அதீதமாக மதிப்பிடுகிறோம். ஒழுங்கீனமான ஆசைகள், வீண்மகிமை, பிறரால் புகழப்பட வேண்டுமென்ற ஆசை, ஆரவாரப் பகட்டு, இன்னும் அதிக உயர்வாக மற்றவர்களால் மதிக்கப்படும் படியாக வாழ்க்-கைக்கு அத்தியாவசியமான காரியங்களை மட்டுமிதமின்றி பயன்படுத்துவது ஆகிய தீமைகள் இந்த ஆங்காரத்திலிருந்தே உருவெடுத்து வருகின்றன. முகஸ்துதிக்கும், வெளிவேடத்திற்-கும் இது வழிவகுக்கிறது.

**ஞான ரீதியான வீண்பெருமையும்** நம்மிடம் இருக்க வாய்ப்புள்ளது. நாம் உத்தமமானவர்கள் என்று நாம் எண்ண-லாம்; நம் செயல்கள் எப்போதும் பரிசுத்தமானவையாக இருப்பதாக நினைக்கலாம். அல்லது நம் பாவங்களை நாம்

ஏற்றுக் கொள்கிற போது, அவற்றின் கனாகனத்தைக் குறைத்துக் காட்டவோ, அல்லது அவற்றிற்கு நொண்டிச் சாக்கு சொல்லவோ நாம் ஆயிரம் காரணங்களைக் கண்டுபிடிக்கலாம்.

**இயற்கைவாதம்** என்னும் போர்வைக்குள் நம் ஆங்காரம் தன்னை மறைத்துக் கொண்டிருக்கக் கூடும். இந்த வகை ஆங்காரம் நம்மிடம் இருந்தால், நம் நடத்தையில் எந்த விதக் கட்டுப்பாட்டையும் கடைப்பிடிக்க மாட்டோம். நம் பேச்சில் அடக்கவொடுக்கமோ, நம் கீழ்ப்படிதலில் மரியாதையோ இருக்காது. நம் தாழ்ச்சி போலியானதாகவும், மற்றவர்களை ஏமாற்றுவதாகவும் இருக்கும்; பிறரோடு பேசும் போது, வார்த்தைகளால் அவர்களை நகையாடுகிறோம்; புண்படுத்துகிறோம். நம் வெறுப்பு நாள்பட்டதாக இருக்கிறது. அர்ப்பண உணர்வுக்கு நாம் எதிரியாகவும், அதிகாரத்தில் பேராசை உள்ளவர்களாகவும், மற்றவர்களை அலட்சியம் செய்ய ஆசையுள்ளவர்களாகவும், நம் செயல்களிலும், வேலையிலும் இறுமாப்புள்ளவர்களாகவும் இருக்கிறோம். நம் சொந்த உள்ளுணர்வின்படி செயல்படுகிறோம்; மற்றவர்களுடைய காரியங்களில் தலையிடுகிறோம். கட்டுப்பாடற்ற விநோதப் பிரியத்தின் காரணமாக, எல்லாவற்றையும் அறிந்து கொள்ள ஆசிக்கிறோம். நமக்குப் புரியாத காரியங்களைப் பற்றிக்கூட எப்போதும் பேசிக் கொண்டிருக்க விரும்புகிறோம்.

**சிடுசிடுப்பும், எரிச்சலும்** உள்ளவர்களாக நம்மை ஆக்கக் கூடிய ஒரு ஆங்காரம் நம்மிடம் இருக்கலாம். அப்படியிருந்தால், மற்றவர்களை வசைபாடுகிறோம்; மனம் நோகச் செய்கிற வார்த்தைகளைப் பேசுகிறோம். மற்றவர்களைக் கேலிசெய்கிறோம், திட்டுகிறோம், தவறாக மதிப்பிடுகிறோம்.

**பரிசேயத் தனமுள்ள** ஆங்காரம் பெருமை பாராட்டச்

செய்கிறது; பிறரை விமரிசனம் செய்கிறது. அது நம்மை வாயாடிகளாக்குகிறது; பொய்கள் சொல்லவும், முரண்பாடுகள் உள்ளவர்களாயிருக்கவும் செய்கிறது; உயர்குடிப் பிறப்பையும், சமூகத்தில் உயரிய நிலையையும், புண்ணியத்தை விட மேலானவையாக மதிக்கிறோம். நடத்தையில் திமிர், நம்மை விடத் தாழ்ந்தவர்கள் என்று நாம் நம்புகிறவர்களோடு இசைந்திருப்பதை அவமானமாகக் கருதுதல் ஆகியவை இந்த ஆங்காரத்தினின்று எழுகின்றன. நம் செயல்களில் கண்மூடித்தனமாக பரிசுத்த ஜீவியத்தை விட சட்டங்களைக் கடுமையாக அனுசரிப்பதை மேலானதாக நினைக்கும் தன்மை இருக்கும். இதனால், ஈடுபாடின்றி நம் கடமைகளை நிறைவேற்றுவோம்; அதில் வெளிவேடமே நிறைந்திருக்கும்.

***உணர்ச்சிவசப் படுதலில்***, அல்லது சுய இரக்கத்தில் நம் ஆங்காரம் மறைந்திருக்கலாம். இவ்விஷயத்தில் மற்றவர்கள் நம்மைப் பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பது பற்றி அதீதக் கவலை உள்ளவர்களாயிருப்போம். மற்றவர்களைப் பற்றிய தவறான கற்பனைகளை வளர்த்துக் கொண்டு, அவர்களை எளிதில் மன்னிக்க மனதில்லாமல் இருப்போம். இந்த வகையான ஆங்காரத்தோடு மிக நெருக்கமாக இணைந்திருப்பது ***அச்சவுணர்வின்*** ஆங்காரமாகும். காரணமே இல்லாத பயத்திலிருந்து இது வளர்கின்றது. இதனால் மற்றவர்களுடைய கருத்துக்களைப் பற்றி நாம் அச்சங் கொள்ளுகிறோம்; மனித மதிப்புக்கு அதிக முக்கியத்துவம் தருகிறோம். இந்த ஆங்காரத்தின் உள்ளுணர்வுக்குக் கீழ்ப்பட்டு, செயல்பட வேண்டிய நேரத்தில் செயல்படாமல் போகிறோம். ஏனென்றால் அடிப்படையற்ற ஒரு பயம் ஞான ரீதியிலான சோம்பலின் கட்டுக்களைக் கொண்டு நம்மைப் பற்றிப் பிடிக்கிறது. இந்தச் சோம்பல் நம் முயற்சிகளை முடக்குகிறது; நம்மை முடிவெடுக்க முடியாதவர்களாக்குகிறது; இதனால் நல்ல வாய்ப்புகளை நாம் பயன்படுத்தாமல் விட்டு விடுகிறோம்.

***மன உறுத்தலின்*** *ஆங்காரமானது, நம் கவனத்தைத் தவறான காரியங்களின் மீது நிலைநிறுத்துகிறது. இதனால் நாம் அக்கறை கொள்ளத் தகுதியற்ற அற்ப காரியங்களிலும் கூட நாம் அதீதமான கவனம் செலுத்துகிறோம். அதே வேளையில் நாம் கவலை கொள்ள வேண்டிய காரியங்களைப் பற்றியோ எந்த உறுத்தலுமின்றி இருக்கிறோம்.*

*நம் சொத்துக்கள், செல்வ வளம், ஜீவிய அந்தஸ்து, நமது அருமையான உடைகள், பேச்சுத் திறன், அழகு அல்லது பலம் ஆகியவற்றை நம் ஆங்காரம் மையமாகக் கொண்டிருக்கலாம். மேலே குறிப்பிடப்பட்டுள்ளவற்றில் சில ஆங்காரங்களால் குறித்துக் காட்டப் படுகிறபடி, இந்த ஆங்காரமானது நம் பக்தியிலிருந்தும், நல்லொழுக்கச் செயல்களிலிருந்தும் கூட வளரக் கூடும்.*

*ஆங்காரம் நம் புண்ணியங்கள் அனைத்தையும் நாசமாக்கி, எல்லா விதமான ஒழுங்கீனங்களுக்குள்ளும் நம்மை இழுத்துச் செல்லக்கூடும். ஆங்காரமுள்ள மனிதன் எத்தகைய பாவத்தையும் செய்பவனாயிருக்கிறான். "ஆங்காரம் முன்னும், நஷ்டம் பின்னும் வருமுன்னே மனம் செருக்குறும்" (பழ. 16:18). எனவே, இந்தத் தீமை எந்த வேடத்தில் நம்மிடம் வெளிப்பட்டாலும், ஞான ஜீவியத்தில் அதை எதிர்த்துப் போராடுவது முற்றிலும் அவசியமானதாகும். நம் இருதயத்தினுள் நுழைய அதை நாம் அனுமதித்தால், அதனோடு சேர்ந்து மற்ற எல்லாத் தீமைகளின் நோய்க் கிருமிகளும் உள்ளே நுழையும்; விரைவில் நாம் சாத்தானுக்கு அடிமைகளாயிருக்கக் காண்போம். அதன் கண்ணியில் சிக்காதபடி நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். ஏனெனில் ஆங்காரமுள்ளவனும், மனந்திரும்ப விரும்பாதவனுமாகிய பாவியின் முடிவு, சர்வேசுரன் வெளிப்படுத்தின படி, பசாசுக்களோடு நித்திய நரக நெருப்பில் தள்ளப் படுவதேயாகும்.*

## ஆங்காரத்திற்கு எதிரான தீர்வுகள்

ஆங்காரத்தை வெல்ல ஒரே வழி தாழ்ச்சியைக் கடைப்பிடிப்பது ஆகும். அது ஒரு முரண்பாடாகத் தோன்றலாம்; ஆனால் தாழ்ச்சியுள்ள மனிதன் தான் ஆங்காரமுள்ளவன் என்று கண்டுபிடிக்கிறான்; உண்மையான ஆர்வத்தோடு, தன் வாழ்வில் ஆங்காரத்தின் வெளிப்பாடுகளின் மீது வெற்றி கொள்ளப் பாடுபடுகிறான்.

தாழ்ச்சியை அடையப் பாடுபடுவதில், நாம் நம் கண்களுக்கு முன்பாக நம் ஆண்டவரையே முன்மாதிரிகையாகக் கொண்டிருக்க வேண்டும். தாழ்ச்சியுள்ளவர்களுக்கு ஆதரவாக அவர் அருளிய வாக்குத்தத்தங்களையும், ஆங்காரமுள்ளவர்களைப் பழிவாங்க அவர் செய்துள்ள ஏற்பாடுகளையும் நாம் நம் மனதில் இருத்தி சிந்தித்து வர வேண்டும்; சர்வேசுரனையே பற்றிப் பிடித்துக் கொண்டு நம் முழு ஆத்துமத்தோடும் அவருடைய திருச்சித்தத்தை நிறைவேற்ற வேண்டும்; இந்தப் புண்ணியத்தைத் திரும்பத் திரும்பக் கேட்டு, ஜெபத்தில் தஞ்சமடைய வேண்டும்; சர்வேசுரனுடைய பிரசன்னத்தில் ஜீவிக்க வேண்டும்; சுய-மறுதலிப்பையும், பிற கிறீஸ்தவப் புண்ணியங்களையும், விசேஷமாக, பொறுமை, சுயவொடுக்கம், பிறர்சிநேகம், சாந்தம், கையளித்தல், சர்வேசுரனுக்கு முழு அர்ப்பணம், தேவ சித்தத்திற்கு ஒத்திருத்தல், இரக்கம், தேவ நம்பிக்கை, பாவத்தின் மீது அருவருப்பு, அடக்கவொடுக்கம் ஆகியவற்றையும் பயிற்சி செய்ய வேண்டும். உலக மகிமைகளை நாம் தேடக் கூடாது; மாறாக நம் ஒன்றுமில்லாமையையும், புண்ணியங்கள் நம்மில் குறைவுபடுவதையும் நாம் ஒத்துக் கொள்ள வேண்டும். அவமானங்களை ஏற்றுக் கொள்ள விருப்பமுடன் இருப்பதோடு, எல்லாக் காரியங்களிலும் நாம் சர்வேசுரனைத் தேடவும் பாடுபட வேண்டும்.

*அத்தியாயம் 2*

# உலோபித்தனம் அல்லது பேராசை

உலோபித்தனம், அல்லது பேராசை என்பது உலகப் பொருட்களின் மீதுள்ள ஒழுங்கற்ற பற்று ஆகும். உலகப் பொருட்களைக் குவித்து வைக்க வேண்டும், அவற்றைச் சொந்தமாகக் கொண்டிருக்க வேண்டுமென்ற ஆசைதான் அது. அவற்றைச் சேர்ப்பதற்காக நியாயமான, அல்லது நியாயமற்ற எல்லா வழிகளையும் பயன்படுத்தும்படி அது நம்மைத் தூண்டுகிறது. உண்மையில் அது சர்வேசுர-னிடத்திலும் அவருடைய பராமரிப்பிலும் நமக்கு நம்பிக்கை இல்லாதிருப்பதின் அடையாளமாக இருக்கிறது.

உலோபித்தனமுள்ளவர்களாக நாம் இருந்தால், சர்வேசுரனையோ, நம் அயலாரையோ, நம்மையோ நாம் நேசிக்க மாட்டோம். பணத்தையும், உடைமைகளையும் மட்டுமே விரும்புவோம். சர்வேசுரனை நேசிக்கவோ, அவரை சேவிக்கவோ நம்மால் முடியாது. ஏனெனில் எந்த மனிதனும் ஒரே நேரத்தில் சர்வேசுரன், மம்மோன் ஆகிய இரண்டு எஜமானர்களை நேசிக்கவோ, சேவிக்கவோ முடியாது. கிறீஸ்துநாதருடைய வார்த்தைகளிலிருந்து (மத். 6:24) இதை நாம் அறிந்திருக்கிறோம். நம் அயலாரையும் நம்மால் நேசிக்க முடியாது. ஏனெனில் நம் சொந்த செல்வத்தைப் பெருக்கிக் கொள்ள எத்தகைய அநீதியையும் செய்து முடிக்க நாம் தயாராக இருக்கிறோம், அல்லது செய்து முடிக்கிறோம். நம்மையே கூட, அல்லது குறைந்த பட்சம், நம் ஆத்துமத்தைக் கூட, நம்மால் நேசிக்க முடியாது; ஏனென்றால் நாம் நம் உடைமைகளை, பரலோகப் பொக்கிஷத்தை அடைவதற்-காகப் பயன்படுத்தாமல், நம் ஆத்துமத்தைப் பசாசுக்கு விற்ப-தற்காகப் பயன்படுத்துகிறோம். நாம் சர்வேசுரனையோ, நம்

அயலாரையோ, நம்மையோ நேசிக்கவில்லை என்றால் சிநேகம் என்பது நம்மிடம் இல்லை. அது இல்லாமல் நாம் எப்படி மோட்சத்தில் பிரவேசிக்க முடியும்? சிநேகம் இல்லாமல் சர்வேசுரன் மட்டில் நமக்குள்ள கடமைகளை நாம் எவ்வாறு நிறைவேற்ற முடியும்? நாம் அவரை மறுதலித்து, கைவிட்டு விடுவோம். "பணத்தாசையே எல்லாத் தீமைகளுக்கும் ஆணிவேராக இருக்கிறது" என்று பரிசுத்த வேதாகமம் நம்மை எச்சரிக்கிறது (1 திமோ.6:10).

ஒழுங்கற்ற நம் நேசம் அல்லது உலோபித்தனம் வெறும் பணத்தைப் பற்றியதாக மட்டுமல்லாமல், புத்தகங்கள், படங்கள், கைவினைப் பொருட்கள், இரும்புக் கருவிகள், நகைகள், வாகனங்கள், வீடுகள், நிலங்கள் போன்ற, வேறு எந்த உலகப் பொருட்களைச் சார்ந்ததாகவும் இருக்கலாம். எனவே, நாம் பணக்காரர்களாக இருந்தாலும் சரி, ஏழைகளாக இருந்தாலும் சரி, நம்மிடம் உலோபித்தனம் என்ற இந்தப் பாவம் இருக்கக் கூடும். மற்ற காரியங்களில் நிகழ்வது போலவே, தீமையை எந்த அளவுக்கு நாம் ஆதரித்து, மனமுவந்து ஏற்றுக் கொள்கிறோமோ, அந்த அளவுக்கு அது அதிகரிக்கிறது.

ஏழைகள், நம் உறவினர்கள் ஆகியவர்கள் மட்டில் நம் இருதயத்தின் கடினத் தன்மையைக் கொண்டு, அல்லது, திருச்சபையை ஆதரிக்கும்படி பண உதவிகள் செய்வதற்கு நமக்குள்ள தயக்கத்தைக் கொண்டு, இந்த உலோபித்தனம் என்கிற தீமை நம்மில் இருப்பதை நாம் கண்டுபிடிக்கலாம். நம் உடைமைகளை எவ்வளவு கஞ்சத்தனமாக நாம் பயன்படுத்துகிறோம், நாம் நியாயமாக பயன்படுத்த வேண்டியவைகளைக் கூட எவ்வாறு சேர்த்து வைக்கிறோம் என்பதைக் கொண்டு இந்தத் தீமையை நாம் பகுத்தறியலாம். பிறர் சிநேகச் செயல்களில் நமக்குள்ள அசமந்தம், நமக்கு ஏதாவது செலவு வைக்கக் கூடிய காரியங்களில் நம் ஆர்வக் குறைவு, பணத்தைச் சேர்த்து

பதுக்கி வைத்தல், அல்லது நம்முடைய வேறு எந்த தனிப்பட்ட உலகப் பற்றைக் கொண்டும் இந்தத் தீமை நம்மிடம் இருப்பதை நாம் அறிந்து கொள்ளலாம். மேலும் நம் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதில் கருமித்தனம், கொடுக்கவோ, கடன் கொடுக்கவோ மறுத்தல், அற்ப இழப்புகளாலும் கூட கலக்கமடைதல், ஆகியவற்றிலும் அது வெளிப்படுகிறது.

ஓர் உண்மையான உலோபியின் துர்க்குணமானது வெளிப்படையானதும், கலகம் விளைவிப்பதுமான தீமையாக இருக்கிறது. தனது செல்வத்தை அதிகரிக்கத் தனக்குக் கிடைக்கும் எந்த வாய்ப்பையும் அவன் தவற விடுவதில்லை. நீதி, அநீதி பார்க்காமல், தன் சேமிப்பைப் பெருக்கிக் கொள்ள எல்லா வழிகளையும் அவன் கையாள்கிறான். வறுமையுள்ள, பரிதாபமான வாழ்வு வாழ்கிறான்; மிகச் சிறிய கேடு அல்லது இழப்பு நேர்ந்தாலும் முறையிடுகிறான், முனகுகிறான். **தன் பணம்** என்ற ஒரே ஒரு சிந்தனை மட்டுமே அவனுக்கு உண்டு. திரளான செல்வம் இருக்கும் போதும்கூட, மிகப் பெரும்பாலும், அசுத்தங்கள் நிரம்பிய சூழலிலும், தரித்திரத்திலும்தான் அவன் மரிக்கிறான்.

நம்மை நாம் உலோபிகள் என வகைப்படுத்த வேண்டியதில்லாமல் இருக்கலாம். ஆனாலும் இந்தத் தீமையை மிகக் குறைந்த அளவில் கொண்டிருப்பதும் கூட நம் ஞான வாழ்வில் மிகப் பெரும் அழிவுகளை ஏற்படுத்தி விடும். அது ஞான காரியங்களின் மதிப்பை நாம் காண முடியாமல் நம் கண்களைக் குருடாக்கி விடுகிறது. உலகாதாயமான, நிலையற்ற பொருட்களை எப்போதும் நாம் தேடிக் கொண்டிருக்கும் போது சர்வேசுரனுக்குத் தர நமக்கு நேரமிருக்காது, அவருடைய காரியங்களில் எந்தச் சுவையுமிருக்காது. நாம் விழிப்பாயிருக்கவில்லை என்றால், உலகக் கவலைகளும் செல்வங்களும் நம் ஆத்துமத்தில் விசுவாசம், தேவபக்தி

ஆகியவற்றின் விதைகளைச் சூழ்ந்து நெறித்து அவற்றைப் பயனற்றவையாக ஆக்கி விடும் என்று நம் ஆண்டவர் ஓர் உவமையில் நம்மை எச்சரிக்கிறார். உலகப் பொருட்களில் நாம் கொள்ளும் பற்றினால் விளைவது வெறும் அற்பப் பாவமாக இருக்கலாம், ஆனாலும் "எவ்வித அக்கிரம துர்க்குணத்திலும், காமம், உலோபம், துஷ்டத்தனத்திலும் மூழ்கினவர்களாய், பொறாமை, கொலை, சண்டை., வஞ்சனை, தீக்குணம் நிறைந்தவர்களாய், காதுக்குள் தூற்றுகிறவர்களாய், புறணி சொல்கிறவர்களாய், தெய்வத்துக்கு வெறுப்பானவர்களாய், இடும்புக் காரராய், அகங்காரிகளாய், அகந்தையுள்ளவர்களாய், தீங்கு உண்டுபண்ணுகிறவர்களாய், பெற்றோருக்கு அடங்காதவர்களாய், மதியீனராய், அவையடக்கமற்றவர்களாய், பற்றுதலற்றவர்களாய், பிரமாணிக்கந் தவறுகிறவர்களாய், இரக்கமற்றவர்களாய்" இருக்கிறவர்களைப் (உரோ. 1:29-31) பற்றி எழுதுகிற போது அர்ச். சின்னப்பர் உண்மையான உலோபித்தனத்தையும் மிகப் பெரிய பாவங்களோடு பட்டியலிடுகிறார்.

உடைமைகளைச் சொந்தமாகக் கொண்டிருக்கும் ஆசை நம் மனித சுபாவத்தில் ஆழமாக வேரோடியிருக்கிறது. அது கட்டுப்படுத்தவும், அழித்து அகற்றவும் மிகக் கடினமான பசியாகும். அதற்கு அடிமையாயிருக்கும்போது நாம் பொருள் சேர்ப்பதற்கு எல்லாவிடங்களிலும் சாக்குப்போக்குகளைத் தேடுகிறோம்: என் குடும்பத்திற்கு வேண்டியதைத் தர வேண்டும், எங்கள் வயோதிகத்தில் எங்களுக்குப் பணம் வேண்டும், எங்கள் ஆரோக்கியத்திற்கு, எங்கள் பாதுகாப்பிற்கு, எங்கள் மகிமைக்கு எங்களுக்குப் பணம் தேவை. எங்களுக்கு கொஞ்சம் உல்லாசம் வேண்டும் என்று சாக்குப் போக்கு சொல்கிறோம். பணம் சம்பாதிக்கவும், நாம் விரும்புகிற அளவு பணத்தையும், சொத்துக்களையும், அந்தஸ்தையும் உறுதிப்படுத்திக் கொள்ளவும், பேராசையால் தூண்டப்பட்டு,

சட்டபூர்வமானதும், சட்டத்திற்கு எதிரானதுமான எல்லா வழிகளையும் தேடுகிறோம். இதற்காகப் பொய் சொல்கிறோம், ஏமாற்றுகிறோம், திருடுகிறோம், இலஞ்சம் வாங்குகிறோம், பொய்சாட்சி சொல்கிறோம், நண்பர்களைக் காட்டிக் கொடுக்கிறோம். மிரட்டிப் பணம் பறித்தல், வன்முறை கொலை ஆகியவற்றைக் கூடச் செய்யத் துணிகிறோம். நாம் இச்சிக்கிறவைகளை அதிகமதிகமாக அடைந்து கொள்வது, அல்லது குறைந்த பட்சம் நம்மிடம் இருப்பதைக் காத்துக் கொள்வது என்ற ஒரே நோக்கம் உள்ளவர்களாய் நாம் இருப்பதால், கொடூரமானவர்களாகவும், இறுகின இருதயமுள்ளவர்களாகவும் கூட நாம் இருக்கக் கூடும்.

"ஒருவன் உலகப் பொருட்களை மிக அபரிமிதமாகச் சேர்க்கிறான் என்றால் அவன் மற்றொருவன் தனக்கு அத்தியாவசியமானவை கூட இல்லாமல் இருக்கச் செய்கிறான், அப்படி இல்லாமல் அவன் அவற்றை இப்படிச் சேர்க்க முடியாது" என்று அர்ச். அக்குயினாஸ் தோமையார் குறித்துக் காட்டுகிறார். இதற்கான சான்றுகளை நாம் எல்லாவிடங்களிலும் காண்கிறோம். பலரிடம் உலகப் பொருட்கள் அபரிமிதமாய் இருக்கும் போது, அங்கே மற்றவர்களுக்கு அநீதி நிகழ்கிறது. பேராசையானது அதிகமான திருப்தியற்ற நிலையையும், சச்சரவையும் ஏற்படுத்துகிறது. செல்வர்களுக்கும், ஏழைகளுக்குமிடையே அது ஒற்றுமையின்மையைத் தூண்டுகிறது.

### உலோபித்தனத்திற்கான தீர்வுகள்

தாராள குணம், ஈகைக் குணம், இரக்கம், தயை ஆகியவற்றைக் கொண்டு உலோபித்தனத்தை எதிர்த்து நாம் போராட வேண்டும். "இரக்கமுள்ளவர்கள் பாக்கியவான்கள், ஏனெனில் அவர்கள் இரக்கம் பெறுவார்கள்" (மத். 5:7).

உதாரகுணம் இருதயத்தின் ஆரோக்கிய நிலையை வெளிப்படுத்துகிறது. அது அதிகமான தேவ சிநேகத்திற்கும், மன சமாதானத்திற்கும், பிறரைப் பற்றிய சிந்தனைக்குமான கதவை விரியத் திறந்து வைக்கிறது. "வாங்குகிறதை விடக் கொடுக்கிறதே பாக்கியம்" (அப். நட. 20:35) என்று பரிசுத்த வேதாகமம் கூறுகிறது.

நாம் செல்வமுள்ளவர்களாய் இல்லாதிருக்கும்போது கூட, ஏழைகளுக்கும், வேதபோதகப் பணிக்கும், மற்ற பிறர்சிநேகப் பணிகளுக்கும் நம்மால் முடிந்ததைத் தரும்படியாக, நம் இருதயங்களை உலகப் பொருட்களிடமிருந்து திருப்பி, நமக்கான செலவுகளைக் குறைத்துக் கொள்ள நம்மால் முடியும். உலகப் பொருட்களின் மீது அதீத பற்றுள்ளவர்களாய் நாம் ஆகாதிருக்க, பிறர் சிநேகத்தையும், பற்றின்மையையும் அனுசரிப்பது நமக்குத் தேவையாயிருக்கிறது. இந்த உலகக் கவலைகளும், அதன் செல்வங்களும், அதன் மாயையான மகிமைகளும், அதன் கடந்து போகிற நிலையற்ற இன்பங்களும், வரவிருக்கும் ஜீவியத்தின் மெய்யான செல்வ வளங்களைத் தேடுவதிலிருந்து நம்மைத் தடுத்து விடவோ, திசைதிருப்பி விடவோ நாம் அவற்றை அனுமதிக்கக் கூடாது.

முடிவாக, நம் பக்தி முயற்சிகளில், நாம் நமக்கென ஞான மகிழ்ச்சியை மட்டுமே தேடும் போது, அவற்றில் உலோபித்தனத்திற்கு எதிரான ஒரு ஞான நன்மை இருப்பதைக் காணலாம் என்பதை இங்கு கூறுவதும் சிறப்பானதாகும். நம் தேவசிநேகத்தை நாம் வெளிப்படுத்த வேண்டும், இவ்வுலகில் நம் ஜீவியத்தின் நோக்கமாக நம் ஞானோபதேசத்தின் முதற் பாடத்திலேயே நாம் அறிந்து கொண்டபடி, அவருடைய சித்தத்தை நிறைவேற்ற வேண்டும் என்ற ஆசையோடு நாம் இந்தப் பக்தி முயற்சிகளில் ஈடுபட வேண்டும்.

*அத்தியாயம் 3*

# மோகம்

மோகம் என்பது பொதுவாக அசுத்ததனம் என்று குறிக்கப் படுகிறது. அசுத்ததனம் ஒரு அவமானகரமான தீமையாகும். ஏனென்றால் அது ஒரு நல்ல, அழகான வல்லமையைப் பாவமாக மாற்றுகிறது. இந்தத் தீமை நிறை கற்புக்கு எதிரானது. நிறைகற்பு மனிதர்களை சம்மனசுக்களைப் போலாக்குகிறது என்று நம் ஆண்டவர் கூறுகிறார். "திருமணமானவர்களுக்கு புலன் ஆசைகளையும், இன்பங்களையும் முறைப்படுத்துவதும், மணமாகாதவர்களுக்கு அவற்றை முற்றிலுமாகத் தடை செய்வதுமாகிய புண்ணியமே கற்பு" என்று அர்ச். அக்குயினாஸ் தோமையார் அதை வரையறுக்கிறார். இவ்வாறு மோகம், அல்லது அசுத்ததனம் என்பது சட்டத்திற்கு எதிரான இன்பங்களை, விசேஷமாக தொடுதல் என்னும் புலனைக் கொண்டு அடையத் தேடுகிற செயலாகும். அசுத்ததனத்தின் பாவங்கள் ஆத்துமத்தைக் கறைப்படுத்துவதோடு, தேவ இஸ்பிரீத்துவானவரின் ஆலயமும், சரீர உத்தானத்தின் போது, என்றென்றைக்கும் மகிமைப்படுத்தப் படப் போவதுமாகிய சரீரத்தையும் கெடுத்து விடுகிறது.

மோகத்தின் வழியாகக் கட்டிக் கொள்ளப்படுகிற விபச்சாரம், திருமணத்திற்கு முந்தைய சரீர இன்பம், முறையற்ற இன்பம், கற்பழிப்பு, கருத்தடை, கருச்சிதைவு, தனிப்பாவம் ஆகியவற்றின் பெயர்களும் கூட அடக்கவொடுக்கமுள்ள செவிகளுக்கு வேதனை தருபவையாக உள்ளன. இதைப் பற்றியே அர்ச் சின்னப்பர், "இவைகளின் பேர் முதலாய் உங்களுக்குள்ளே சொல்லப்படக் கூடாது" என்கிறார் (எபே. 5:3). அவற்றைப் பற்றிய ஒரு திகிலுணர்வை மனத்தில் தூண்டியெழுப்புவதற்காக மட்டுமே நாம் அவற்றின் பெயர்களை உச்சரிக்க வேண்டும்.

அசுத்ததனமானது நம் எல்லாப் புலன்களையும் தனக்குள் வைத்து மூடிக் கொள்வதோடு, அவற்றின் வழியாகவே நம் ஆத்துமத்திற்குள் நுழைகிறது. ஞான மதிப்பீடுகளை நாம் காண முடியாமல் அது நம் கண்களைக் குருடாக்குகிறது, நம் மனங்களை இருட்டடிக்கிறது, நம் சித்தங்களைப் பலவீனப் படுத்துகிறது, சர்வேசுரனுடைய இடத்தில் படைக்கப்பட்ட ஒரு சிருஷ்டியை ஆராதிக்கும் நிலைக்கு நம்மைத் தள்ளி விடுகின்றது. அசுத்த சிந்தனைகளால் **மனத்தின்** பாவங்க-ளைக் கட்டிக் கொள்கிறோம். கண்களை விநோதப் பிரியத்திற்கு விட்டுக் கொடுப்பதாலும், ஆட்களையும், படங்களையும், பொருட்களையும் கெட்ட கண் கொண்டு பார்ப்பதாலும், பாவகரமான வாசகங்களை வாசிப்பதாலும் **கண்களின்** பாவங்களைச் செய்கிறோம். நாகரீகமற்ற பேச்சுக்களையும், அசுத்தமான, இச்சை தரும் அருவருப்பான இரகசியப் பொருள் கொண்ட கதைகளையும், நகைச்சுவைத் துணுக்குகளையும், பாடல்களையும் கேட்பதன் மூலமாக **காதுகளின்** பாவங்களைச் செய்கிறோம். காம இச்சையைத் தூண்டும் துர்மணங்களை முகர்வதன் மூலமாக **மூக்கின்***
பாவங்களைச் செய்கிறோம். கெட்ட வார்த்தைகள், பாடல்கள் ஆகியவற்றாலும், அசுத்தப் பேச்சுக்களைக் கடிந்து கொள்ளத் தவறுவதாலும் **வாயின்** பாவங்களைச் செய்கி-றோம். புலனின்ப முத்தத்தால் **உதடுகளின்** பாவங்களையும், அசுத்த தொடுதல்கள், வருடல்கள், தழுவல்கள், அல்லது மற்ற பாவகரமான செயல்களால், **கரங்களின்** பாவங்களையும், அசுத்த ஆசைகள், தன்னிச்சையாக நம் விருப்பமின்றி நம்

---

* மனம், கண்கள், மூக்கு போன்றவற்றின் பாவங்களின் அட்ட-வணையைப் பொறுத்த வரை, பாவம் கட்டிக் கொள்ளப் பட, சித்தத்தின் சம்மதம் அவசியம் என்பது மனதில் கொள்ளப் பட வேண்டும். சித்தத்தின் சம்மதம் இல்லாத இடத்தில் பாவமும் இல்லை.--வெளியீட்டாளர், 2000.

மனத்தில் எழும் மோக உணர்வுகளை உடனடியாக அடக்கத் தவறுதல் ஆகியவற்றைக் கொண்டு **இருதயத்தின்** பாவங்களைச் செய்கிறோம், **பிறரைப்** பாவத்திற்குத் தூண்டும் பெரும் பாவங்களைச் செய்கிறோம்; **தோழர்களால்** தூண்டப் பட்டு நாம் பாவங்களைச் செய்கிறோம்.

அசுத்ததனத்திற்குக் கையளிப்பது எல்லா வழிகளிலும் தேவ திட்டத்திற்கு எதிரானதாக இருக்கிறது. மணமானவர்கள் மெய்விவாக பந்தத்தால் அர்ச்சிக்கப்படுகிற சட்டபூர்வமான புலனின்பங்களை அனுபவிக்கும் போதும் கூட, அவர்கள் போதுமான சுய கட்டுப்பாட்டின் மூலம் தங்கள் அந்தஸ்திற்கேற்ப கற்பைக் கடைப்பிடிக்க வேண்டும். திருமணமானவர்கள் மற்றவர்களோடு தவறான நடத்தையில் ஈடுபடுவது, அவர்களுக்கு இரண்டு மடங்கு மோசமான பாவமாகும். நிறை கற்பு என்பது குருத்துவ, அல்லது துறவறத்திற்குரிய அர்ப்பணக் கற்பாக இருந்தாலும் சரி, அல்லது மணமாகாதவர்களின் கற்பாக இருந்தாலும் சரி, அல்லது மணமானவர்களின் கற்பாக இருந்தாலும் சரி, சர்வேசுரனுடைய ஊழியத்திற்கு நம் சத்துவங்களை அர்ப்பணிப்பதன் அடையாளமாகவே அதை நாம் காண வேண்டும். அப்போது நம்மைச் சூழ்ந்திருக்கிற உலகத்தை உயர்த்துகிற நற்பாதிப்பாக அது இருக்கும்.

பெரும்பாலும் வேறு பல தீமைகள் அசுத்ததனத்தைத் தொடர்ந்து வருகின்றன. அது மனத்தைக் குருடாக்குகிறது; சித்தத்தை வக்கிரமுள்ளதாக்குகிறது; இருதயத்தைக் கடினப் படுத்துகிறது. அது மனஸ்தாபத்தை நிலையற்றதாக்குகிறது; சர்வேசுரனுடைய திருச்சட்டம், விரும்பப்படுகிற இன்பத்தைத் தடை செய்வதால், மோகமானது அவர் மேலேயே ஒரு வெறுப்பை வளர்க்கிறது; மேலும் உலகக் காரியங்களின் மீது ஒரு அதீதமான நேசத்தையும் வளர்க்கிறது; எதிர்காலத்

தண்டனை பற்றிய பயத்தை ஏற்படுத்தி, மனக்கவலைக்கு அது நம்மை ஆளாக்குகிறது. மிக அடிக்கடி நோய்களுக்கும், பைத்திய நிலைக்கும் உட்படுத்துகிறது. அதன் பாதையில் கீழ்ப்படியாமை, துர்மாதிரிகை, விசுவாச இழப்பு ஆகியவை பின்தொடர்கின்றன. அடிக்கடி அசுத்த நடவடிக்கைகளின் விளைவாக, மோக பாவி நேர்மையற்ற விதமாகப் பாவசங்கீர்த்தனங்கள் செய்கிறான், தேவத் துரோகமான முறையில் திவ்ய நன்மை உட்கொள்கிறான். மோகம், அல்லது அசுத்ததனமே வேறு எந்தப் பாவத்தையும் விட அதிக ஆத்துமங்களைக் கொல்கிற கொடிய பாவமாக இருக்கக் கூடும்.

வக்கிரம், புலனிச்சை, அசுத்ததனம் ஆகியவை சோம்பேறித்தனத்தாலும், வசதியும், சௌகரியங்களும் உள்ள வாழ்வு முறையாலும், போஜனப் பிரியத்தாலும் போஷிக்கப் படுகின்றன. அருவருப்பான, உள்ளர்த்தங் கொண்ட அசுத்த நூல்கள், துர்மாதிரிகையான திரைப்படங்கள், தொலைக்காட்சி நிகழ்ச்சிகள், அடக்கமற்ற படங்கள், பாவகரமான நடனம், அடக்கமற்ற உடைகள் அணிதல், கெட்ட நண்பர்கள் ஆகியவை நம்மைப் பாவச் செயல்களுக்குள் வழிநடத்திச் செல்லக் கூடும். முதலிலேயே திருமணம் செய்கிற எதிர்பார்ப்பின்றி சேர்ந்து வாழுகிற ஆண் பெண்கள் செய்வது போல, எதிர்பாலாருடன் அதிக நேரம் சேர்ந்திருப்பது பெரும்பாலும் அசுத்ததனத்திற்குரிய சாவான பாவ சந்தர்ப்பமாயிருக்கின்றது.

## பரிசுத்ததனத்தைப் பாதுகாத்துக் கொள்ளும் வழிகள்

ஜென்மப் பாவத்திற்குரிய ஒரு தண்டனையாகத்தான் நாம் நம் வாழ்நாள் முழுவதும் அசுத்ததனத்திற்கு எதிரான போராட்டத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டியுள்ளது. இந்தப் போராட்டத்தில் புலன்களையும், சிந்தனைகள்,

ஆசைகள் மற்றும் பேச்சு ஆகியவற்றையும் அடக்கியாள்வது அவசியமாயிருக்கிறது. அடக்கமான உடை உடுத்துவது, செயல்களில் கட்டுப்பாடு, நம் பொழுதுபோக்கு அம்சங்களை மிகக் கவனத்தோடு தேர்ந்தெடுப்பது ஆகியவை, நம்மிலும், பிறரிலும் பரிசுத்ததனத்தைப் பாதுகாத்துக் கொள்வதற்கு அவசியமானவை. ஒறுத்தல் மற்றும் சுய பரித்தியாக உணர்வு, அடிக்கடி தேவத்திரவிய அனுமானங்களிடம் தஞ்சமடைதல், இஸ்பிரீத்து சாந்துவானவருக்குக் கீழ்ப்படிதல் மற்றும் ஜெபம் ஆகியவை, இந்தப் போராட்டத்தில் போர்க் கருவிகளாகப் பயன்படுத்தப்பட வேண்டிய வழிகளாகும். நெருப்போடு விளையாடி நாம் நம்மைச் சுட்டுக் கொள்ளக் கூடாது. அசுத்ததனத்தின் பாவ சந்தர்ப்பங்களில் இருந்து கொண்டே, பாவம் செய்யாமலிருக்க நம்மால் முடியாது. தாழ்ச்சியோடும், நம் சொந்த பலத்தில் நம்பிக்கை வையாமலும் நாம் பாவ சந்தர்ப்பங்களிலிருந்து பறந்தோடிப் போக வேண்டும். ஏனெனில் பரிசுத்த வேதாகமம் கூறுவது போல, "ஆபத்தை நேசிக்கிறவன் அதிலேயே மடிவான்" (சர்வப் பிரசங்கி 3:27).

தன்னிச்சையான கெட்ட சிந்தனைகள், அவை எவ்வளவுதான் அசுத்தமானவையாகவும், அருவருக்கத் தக்கவையாகவும் இருந்தாலும், அவை பாவங்கள் அல்ல. அவற்றிற்கு சம்மதிப்பதால் மட்டுமே நாம் பாவம் கட்டிக் கொள்கிறோம். சேசுநாதருடையவும், மாமரியினுடையவும் திருப் பெயர்களைக் கூவியழைத்துக் கொண்டிருக்கும் வரையிலும் நாம் ஒருபோதும் தோற்றுப்போக மாட்டோம். பாவ சோதனைகளின் தாக்குதல்களின் போது, "சர்வேசுரனை நோகச் செய்வதை விட சாவதே மேல்" என்னும் நம்முடைய பிரதிக்கினையைப் புதுப்பித்துக் கொள்வது உத்தமப் பலன் தரும் காரியம். அடிக்கடி, பரிசுத்த தீர்த்தத்தால் நம்மீது சிலுவை அடையாளம் வரைந்து கொள்வதும் ஒரு நல்ல வழக்கம். நம்

பாவ சோதனைகளை நம் ஆன்ம குருவிடம் வெளிப்படுத்துவது நமக்கு மிக உதவியாக இருக்கும். ஆயினும், இவை எல்லாவற்றையும் விட ஜெபமே மிகச் சிறந்த தீர்வாக இருக்கிறது. சேசு, மரியாயிடம் உதவி கேட்டுக் கூவியழைப்பதும் இந்த ஜெபங்களோடு எப்போதும் சேர்ந்திருக்க வேண்டும்.

*அத்தியாயம் 4*

# கோபம்

கோபம் என்பது ஆத்துமத்தின் ஆசாபாசங்களுள் ஒன்றாக இருக்கிறது. ஒருவர் தன் செயலால் நம்மை நோகச் செய்கிறார் என்று நாம் எண்ணுகிறோம். இது நிஜமானதாகவோ, அல்லது வெறுமனே நம் கற்பனையாகவோ கூட இருக்கலாம். ஆனாலும், அப்படி நம்மை நோகச் செய்தவருடன் நாம் கணக்குத் தீர்த்துக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறோம். இந்த விருப்பத்தில் இருந்துதான் கோபம் பிறந்து வருகிறது. பழிவாங்குவதற்கான விருப்பத்தின் மீது நாம் வெற்றி கொள்ளாத போது அது பாவமாகவும், ஒரு தீமையாகவும் ஆகிறது. அது பிறர்சிநேகத்திற்கும், நீதிக்கும் எதிரானதாகும். ஆயினும் எல்லா விதமான கோபமும் தீமை அல்ல. அவ்வப்போது ஏற்படுகிற சிடுசிடுப்பான உணர்வு கோபம் என்னும் தீமையாக இருப்பதில்லை. எனவே அது பாவமில்லாமல் இருக்கக் கூடும். நல்லதும், புண்ணியத் தன்மை உள்ளதுமான ஒரு கோபமும் உண்டு. ஒரு முறையான காரணத்திலிருந்து இத்தகைய கோபம் புறப்பட்டு வருகிறது. தேவாலயத்திலிருந்து வாங்குவோரையும் விற்போரையும் நம் ஆண்டவர் சாட்டைகளால் அடித்து விரட்டிய செயல் இதற்குச் சரியான எடுத்துக்காட்டு.

ஒரு குறிப்பிட்ட ஆள், அல்லது ஆட்களின் மீது நம் இருதயத்தில் வன்மம் அல்லது சீற்றம் கொள்கிற போதும், வார்த்தையாலோ, செயலாலோ யாருக்காவது தீங்கு செய்ய வேண்டும் என்று திட்டமிடும் போதும், நம்மை நோகச் செய்தவரை அவமானப் படுத்தும் நோக்கத்தோடு பேசும்போதும், நாம் கோபத்துக்கு இடம் கொடுக்கிறோம். ஒருவரை அடிக்கும் அளவுக்கு, அல்லது காயப் படுத்தும் அளவுக்கு நாம்

பரபரப்பும், கிளர்ச்சியும் அடையும் போதும், வேறொருவரோடு வாய்ச் சண்டையிலும் சச்சரவிலும் ஈடுபடும் போதும், சிடுசிடுப்பான முகபாவத்தாலோ, பேசாமல் மௌனம் சாதிப்பதாலோ அடுத்தவருக்கு எதிரான நம் மனக்கசப்பை வெளிப்படுத்தும் போதும், கோபம் என்னும் குற்றத்திற்கு நாம் ஆளாகிறோம். நம் இருதயத்தில் நாள்கணக்கில், அல்லது மாதக்கணக்கில், அல்லது வருடக் கணக்கிலும் கூட வன்மத்திற்கும், வெறுப்புக்கும் இடம் கொடுத்து, இரக்கம், நட்பு ஆகியவற்றின் அடையாளங்களைத் தவிர்த்து வாழும்போது கோபம் என்னும் பாவத்தைக் கட்டிக் கொள்கிறோம். நம் அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தி, நமக்குக் கீழ் பணிபுரிகிறவர்களை அளவுக்கு மீறித் தண்டிக்கிற போதும் இதே பாவத்தை நாம் கட்டிக் கொள்கிறோம். அந்தரங்கத்திலோ, வெளியரங்கமாகவோ தானே விரும்பி தேவதூஷணம் சொல்கிறவன் சர்வேசுரனுக்கு எதிராகக் கூட கோபம் என்னும் பாவத்தைக் கட்டிக் கொள்கிறான்.

கோபம் அழிவை ஏற்படுத்துவதும், மிக அதிகமாகக் காயப்படுத்தக் கூடியதுமான தீமையாகும். கோபப்படும் போது நாம் அறிவை இழந்து விடுகிறோம். அது சர்வேசுரனிடமிருந்து நம்மை அந்நியமாக்குகிறது; நண்பர்களையும், உறவினர்களையும் நம்மிடமிருந்து அகற்றி விடுகிறது; அது நம் புத்தியை மூடி மறைக்கிறது. அதன் புத்திக்கு ஒவ்வாத பிடிவாத குணத்தினால், மற்றவர்களின் உரிமையை நாம் காலடியில் போட்டு மிதித்து விடுகிறோம்.

கோபம் சமாதானத்தை அழித்து, அழிவுக்குரிய போர்களை உருவாக்குகிறது; எல்லா வகையான தீமைகளுக்கும், பகைகளுக்கும், நீடிய சச்சரவுகளுக்கும், அவமானங்களுக்கும், வஞ்சத்திற்கும், அபாண்டங்களுக்கும், முரண்பாடுள்ள பிணக்குகளுக்கும், தேவ தூஷணத்திற்கும், வெறுப்புக்கும்,

பழிவாங்குதலுக்கும், கொலைக்கும் காரணமாக அமைகிறது. இவை எல்லாமும் சேர்ந்து பிறர்சிநேகத்தைக் கொன்று விடுவதோடு, சர்வேசுரனிடமிருந்து நமக்கு வரக்கூடிய மிகப் பெரும் கொடையாகிய வரப்பிரசாதத்திற்குப் பெரும் தடைகளாகவும் இருக்கின்றன.

## கோபத்தை எதிர்த்து நிற்பதற்கு

கோபம்தான் நமது பிரச்சினை என்றால், என்ன காரணத்திற்காக நாம் அடிக்கடியும், எளிதாகவும் கோபவசப் படுகிறோம் என்பதை நாம் கண்டுபிடிக்க வேண்டும். அதைத் தடுப்பதில் கவனமாயிருந்து, அதை வெல்வதற்காக ஜெபிக்க வேண்டும். நமக்கெதிராகச் செய்யப்பட்ட குற்றம் எத்தகையதாக இருந்தாலும், அதைச் செய்தவர் யாராக இருந்தாலும், நம்மைச் சோதிக்கவும், சாந்தத்தைக் கடைப்பிடிக்க நம்மைப் பழக்கவும், அதன் மூலம் நம் பேறுபலன்களை அதிகரிக்கவும், சர்வேசுரன் தாமே அதை அனுமதிக்கிறார் என்பதில் நாம் உறுதியாக இருக்க வேண்டும். மனக்குழப்பத்தின் அடையாளங்களை வெளிக் காட்டாமல் இருக்கவும், நம் மனத்தில் கடுஞ்சீற்றம் இருப்பதை வார்த்தையாலும் செயலாலும் காட்டிக் கொடுக்காமலும் இருக்கவும், கோபம் மனதில் அதிகரிப்பதற்கு இடம் தருவதை விடுத்து, நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டும்.

ஒரு ஞான நூலாசிரியர் பின்வரும் அற்புதமான அறிவுரையைத் தருகிறார்: "கோபத்தின் ஒவ்வொரு அசைவையும் அணைத்து விடக் கூடிய ஓர் அமைதியுள்ள தனியிடத்தை உனக்குள் எப்போதும் கொண்டிரு. இவ்வாறு எப்போதாவது நீ காயப்படுத்தப்பட்ட பின்பு, உன் உதடுகள் மௌனமாக இருப்பது மட்டுமில்லாமல், ஓர் உள்ளார்ந்த அமைதியையும் நீ கடைப்பிடிக்க வேண்டும். இப்படி

உன்னையே நீ சாந்தப் படுத்திய பின், உனக்கெதிராகக் கோபத்தோடு இருப்பவனுடைய கோபத்தை அவனிடமிருந்து அகற்றப் பாடுபடு. நீ பெற்றுக் கொண்ட மனக் காயத்தை நீ ஒருபோதும் திரும்பவும் நினைக்கவே கூடாது" (டோம் வான் ஹுத்ரிவ், O.S.B., in Benedictine Peace.)

கோபத்தைத் தடுப்பது என்பது சர்வேசுரனுடைய ஆளுகைக்கு நம்மை ஒப்புக்கொடுப்பதை நோக்கி நாம் மேலும் ஓர் அடியெடுத்து வைப்பதற்கு சமமாகும். சீரான மனநிலை மற்றவர்களைக் கவர்வதோடு, முழுமையான சந்தோஷத்திற்கு உத்திரவாதமாகவும் இருக்கிறது. ஒரு மென்மையான பதில் கடுஞ்சினத்தை அகற்றுகிறது. எரிச்சலூட்டப் படும்போது மென்மையோடும், சாந்தத்தோடும் இருப்போமென்றால், கோபத்தால் தானும் பாதிக்கப்பட்ட நிலையிலிருக்கிற மற்றொருவனுடைய கோபத்தை நாம் தணித்து விடுவோம். எத்தகைய பழிவாங்குவதையும் கடவுள் நமக்கு அனுமதிப்பதில்லை என்பதை நாம் எப்போதும் நினைவில் கொள்ள வேண்டும். ஒருவன் நம் கோபத்தைத் தூண்டியிருக்கிறான் என்றால், நம் இருதயத்திலிருந்து நாம் அவனை மன்னிக்க வேண்டும். அவனுக்கு இரக்கம் காட்டுவதற்கான ஒரு சந்தர்ப்பத்தை நாம் தேட வேண்டும் என்று நம் ஆண்டவர் போதிக்கிறார். ஏனெனில் மற்றவர்களுக்கு நன்மை செய்வதால், நாம் அவர்களை நேசிக்கிறோம். இத்தகைய செயல் நமது உள்ளரங்கமான மன்னித்தலுக்கு வெளியரங்கமான முத்திரையாகிறது.

எல்லாச் சமயங்களிலும் கோபத்தை வெல்லவும், சுய கட்டுப்பாட்டைக் கடைப்பிடிக்கவும் நமக்கு தேவ வரப்பிரசாதம் தேவை. மன அமைதியையும், சந்துஷ்டியையும், சமாதானத்தையும் நமக்குத் தந்தருள வேண்டுமென்று நாம் சர்வேசுரனை அடிக்கடி மன்றாட வேண்டும்; சோதனை

வேளைகளில் உடனடியாக நமக்கு உதவும்படி அவரை நாம் அழைக்க வேண்டும்.

இயல்பாகவே எளிதில் கோபப்படுகிறவர்களாக நாம் இருந்தால், பரலோக மந்திரத்தில் நாம் செய்யும் விண்ணப்பத்திற்குத் தனிக்கவனம் தர வேண்டும். அதில் நாம், "எங்களுக்குத் தீமை செய்கிறவர்களை நாங்கள் பொறுப்பது போல, எங்கள் பாவங்களைப் பொறுத்தருளும்" என்று ஜெபிக்கிறோம். மேலும் நம் இருதயத்திலிருந்து பிறரை மன்னிக்க நாம் முயற்சிகள் எடுக்க வேண்டும். இதுவே சுபாவத்திற்கு மேலான பொறுமையுள்ள மனவொடுக்கம், சாந்தம், மன்னித்தல் என்னும் புண்ணியமாகும்.

கோபம் என்பது முரண்பாடுகளைத் தாங்க முடியாத, எதிர்க்கப் பட்ட ஆங்காரம், தன் சொந்த சௌகரியத்தையும், வசதியையும் மட்டுமே தேடுகிற சுயநலம் ஆகியவற்றின் குழந்தையாக இருக்கிறது. ஞான ஜீவிய முன்னேற்றத்திற்கு வெகு அவசியமான தேவையாகிய மனச் சமாதானத்திற்கு அது மிகவும் எதிரானது. அது வெடித்துச் சிதறுகிற கோப வெறியாக இருந்தாலும் சரி, சிடுசிடுப்பும், கசப்புமுள்ள மனநிலையாக இருந்தாலும் சரி, கிறீஸ்தவ ஜீவியத்தில் அதற்கு இடம் இல்லை. பொறுமையற்றதனம், எரிச்சல் ஆகியவற்றின் சிறு சிறு வடிவங்களைக் கூட தடுப்பது, கோபம் என்னும் ஆசாபாசமாகிய நோய் வருமுன்பே அதைத் தடுப்பதற்கு நமக்கு மிகவும் உதவியாக இருக்கும்.

*அத்தியாயம் 5*

# காய்மகாரம்

வெறுப்பு, அவதூறு, பிறரது நற்பெயரைக் கெடுத்தல், பிறர் துன்புறுவதைக் கண்டு மகிழ்தல், பிறர் செல்வச் செழிப்போடு இருப்பதைக் கண்டு மனம் புழுங்குதல் ஆகியவை, காய்மகாரம் என்ற வேரிலிருந்துதான் முளைத்தெழுகின்றன. வெறுப்பு, சண்டை, சச்சரவுகள், வாக்குவாதம், கலாபனை, புறணிப் பேச்சு, பொறாமை, இழிவுபடுத்துதல், பிறர்சிநேகமற்ற நிலை, கெடுமதி, கெடுமனம் ஆகியவையும் இந்த காய்மகாரத்திலிருந்தே ஊற்றெடுக்கின்றன. அவை நம்மிடமுள்ள நல்ல அம்சங்களையும், மதிக்கப்பட நமக்குள்ள உரிமையையும் குறைப்பதாகத் தோன்றுவதால், நம் பிறனுடைய உலகப் பொருட்கள், உடைமைகளை, அல்லது அவனுடைய ஞானக் கொடைகள், நற்குணங்களைக் கண்டு அவன் மேல் காய்மகாரம் கொள்கிறோம்.

நாம் இந்தத் தீமையைப் பெரிதாக நினையாவிட்டாலும், அதுவே சர்வேசுரனால் அதிகமாக வெறுக்கப்படுவதும், அவருடைய வரப்பிரசாதத்திற்கு மிகவும் எதிரானதுமாக இருக்கிறது. அடிப்படையில் அது சர்வேசுரனுக்கு நாம் காட்டுகிற நன்றியற்றதனமாக உள்ளது.

காய்மகாரம், ஆங்காரத்திலிருந்து பிறக்கிறது. யாரைப் பார்த்து காய்மகாரப் படுகிறோமோ, அவரை விட மேலானவர்களாக இருக்க நாம் ஆசிக்கிறோம். எனவே அவரிடம் ஏதாவது நல்ல பண்புகள் இருந்தால் அவற்றைக் கண்டு நாம் வேதனைப்படுகிறோம்; அவற்றை இழிவுபடுத்துகிறோம். அவருக்கு ஏதாவது தீங்கு விளையும்போது மகிழ்கிறோம்.

அவர் பேசுவதையும், செய்வதையும் தவறாக மிகைப்படுத்து-கிறோம். அவரிடம் ஏதாவது ஒரு குறையைக் கண்டால், அதை மற்றவர்கள் முன் பெரிதாக்கிக் காட்டுகிறோம்.

காய்மகாரம் நம் இருதயத்தில் பிறர் சிநேகத்தை அழித்து, உத்தமதனத்தில் முன்னேற முடியாதபடி நம்மைத் தடுக்கி-றது. அது நம்மை சர்வேசுரனால் வெறுக்கப் படுகிறவர்களாக ஆக்கி விடுகிறது. நம்மை நன்றியற்றவர்களாகவும் ஆக்குகி-றது. இதனால் நமக்குச் செய்யப் படுகிற நன்மைகளுக்கு நாம் நன்றி செலுத்துவதில்லை, அதை விட மோசமாக, அந்த நன்மைகளில் கூட நாம் குறை காண்கிறோம்.

## காய்மகாரத்திற்கு எதிரான தீர்வுகள்

காய்மகாரத்தை விட குணப்படுத்தக் கடினமானதும், ஆத்துமத்திற்கு அதிகத் துன்பத்தையும், அலைக்கழிப்பையும், மனச் சித்திரவதையையும் தருவதுமான நோய் வேறெதுவும் இல்லை. ஒரு புழுவைப் போல அது இருதயத்தில் வளர்கிறது. அதற்கு எதிரான முக்கியமான தீர்வுகள், பக்திப்பற்றுதலுள்ள **ஜெபம்**, **தாழ்ச்சியை** அனுசரித்தல், இந்தப் பாவத்தின் கொடிய தன்மையைப் பற்றியும், அதைக் குணப்படுத்துவதில் உள்ள சிரமம், அதிலிருந்து பொங்கி வழிகிற தீமைகள் ஆகியவற்றைப் பற்றியும் தியானித்தல் ஆகியவை அகும். அர்ச்சியசிஷ்டவர்களின் வாழ்வுகள் இக்காரியத்தில் நமக்கு இன்னும் அதிகத் தூண்டுதல்களைத் தர வல்லவை.

காய்மகாரத்திற்கு எதிரான புண்ணியம் **பிறர் சிநேகம்**, அல்லது **சகோதர நேசம்** ஆகும். இந்தப் பிறர் சிநேகம் நம் அயலாருடைய அவசரங்களை நம்முடைய அவசரங்களைப் போல நாம் நினைக்கச் செய்கிறது. மற்றவர்கள் நிமித்தமாக செயலாற்றவும், துன்புறவும் விருப்பமுள்ளவர்களாக அது

நம்மை மாற்றுகிறது. இன்னொருவன் துன்ப துரிதங்களுக்கு ஆளாகிற போது, அவன்மீது ஒரு இருதய பூர்வமான இரக்கத்தை அது நம்மில் எழுப்புகிறது, அவனுக்கு உதவி செய்ய வேண்டும் என்ற ஆசையையும் நம்மில் உருவாக்குகிறது. அவனது வெற்றிகளில் நாம் உண்மையான மகிழ்ச்சி கொள்ளச் செய்கிறது. வெறுப்புணர்வோ, அல்லது கெடுமதியோ மனதில் எழும்போது அதைக் கடிந்து அகற்றுகிறது.

காய்மகாரம் பசாசின் கருவியாக இருக்கிறது. அது ஆத்துமங்களின் நன்மையைக் கண்டு காய்மகாரப்பட்டு, அவற்றை அழிப்பதன் மூலம் தான் தண்டிக்கப்பட்டதற்காகக் கடவுளைப் பழிவாங்க விரும்புகிறது. எனவே அது ஆத்துமங்களை அழிக்கும் நோக்கத்தோடு உலகெங்கும் சுற்றித் திரிகிறது. அதன் கருவியாக இருக்க நாம் விரும்பவில்லை என்றால், மற்றவர்களோடு நாம் கொள்ளும் உறவுகளில் சமாதானமும், சிநேகமுமே அடிப்படை விதியாக இருக்குமாறு நாம் கடுமையாக முயல வேண்டும். சர்வேசுரனுக்கு முன்பாக நாம் அனைவரும் சகோதரர்கள்; ஞானஸ்நானத்தின் வழியாக நாம் கிறீஸ்துநாதருடைய ஒரே ஞான சரீரத்தின் உறுப்புகள் ஆனோம். இவ்வாறு, நம் பிறனை நோகச் செய்கிற போது, நம் ஆண்டவருக்கு எதிராகவும், நமக்கு எதிராகவுமே நாம் பாவம் செய்கிறோம். மற்றவர்களைப் பற்றி எப்போதும் நல்லதே பேச வேண்டுமென்றும், அவர்களை ஆதரிக்க வேண்டும் என்றும், பிறர் சிநேகச் செயல்களால் அவர்களுக்கு உதவ வேண்டுமென்றும் நாம் விரும்பினால், சகல மனிதரிலும் கிறீஸ்துநாதரை நாம் காண வேண்டும். நாம் அனைவரும் ஒரே சரீரமாக இருக்கிறோம். மோட்சத்தில் ஒன்றாக நித்திய ஜீவியம் அனுபவிக்கும் ஒரே இறுதிக் கதியைத் தேடியே இவ்வுலகில் ஜீவிக்கிறோம். இவ்வாறு நாம் **ஒரே** சரீரமாக இருப்பதால், கிறீஸ்துநாதருடைய **ஒரே இஸ்பிரீத்துவால்**, தாமே சிநேகமாயிருக்கிற இஸ்பிரீத்துசாந்துவானவரால் நாம் உயிரூட்டப்பட வேண்டும்.

*அத்தியாயம் 6*

# போசனப் பிரியம்

போசனப் பிரியம் என்பது உணவு, பானங்கள் ஆகியவற்றின் மீது ஒருவனுக்குள்ள முறைப்படுத்தப்படாத நேசம் ஆகும். அது ஒழுங்கற்ற பசி ஆகும். அதன் மூலமாக உண்பதற்கும், குடிப்பதற்கும் சர்வேசுரன் தந்திருக்கிற நியாயமான இன்பத்தை நாம் துர்ப்பிரயோகம் செய்கிறோம். மிருகங்கள் ஒருபோதும் அதிகமாக உண்பதோ, குடிப்பதோ இல்லையென்றாலும், போசனப் பிரியம் மனிதனை மிருகத்துக்கு ஒப்பாக்குகிறது என்று சில சமயங்களில் சொல்லப் படுகிறது. இருந்தாலும் இந்த வாக்கியத்தில் கொஞ்சம் உண்மை இருக்கிறது. ஏனென்றால் போசனப் பிரியம், மனத்தை, அதாவது புத்தியையும், அறிவையும் மந்தமாக்குகிறது. இந்த சத்துவமே நம்மை மிருகங்களுக்கு மேலானவர்களாக ஆக்குகிறது.

போசனப் பிரியம் நம் ஞான ஜீவியத்தில் ஏற்படுகிற மோசமான தடைகளுக்கு ஆதாரமாக இருக்கிறது. அதிகமாக உண்டு குடித்தபின் படிப்பதோ, ஜெபிப்பதோ எளிதான காரியமல்ல. போசனப்பிரியம் சித்தத்தைப் பலவீனப்படுத்தி, சோம்பலுணர்வையும், புலன்களின் இச்சையையும், அசுத்ததனத்தையும் வளர்க்கிறது. பெரும்பாலும் அபத்தமும், வக்கிரமும், அருவருப்பான பேச்சுமே இதன் விளைவுகளாக இருக்கின்றன.

அளவுக்கு அதிகமாக உண்பதன் மூலம், அல்லது மிக வேகமாகவும், பேராசையோடும் உண்பதன் மூலம் நாம் சாப்பாட்டுப் பிரியர்கள் என்று அழைக்கப்படக் கூடும். மிகவும் நுணுக்கமான சுவை உணர்வுள்ளவர்களாகவும், வழக்கத்-

துக்கு மாறான உணவுகள், பதார்த்தங்களை விரும்புகிறவர்களாகவும் நாம் இருந்தால், நாக்கை நம்பி வாழ்கிறவர்கள் என்ற பெயர் கூட நமக்கு வரலாம். அற்ப காரியங்களிலும் மிகுந்த கவனம் செலுத்திக் கொண்டும், திருப்திப் படுத்தப் பட கடினமானவர்களாகவும், விமரிசன மனமுள்ளவர்களாகவும், உணவைப் பற்றி முணுமுணுக்கிறவர்களாகவும் இருப்பதன் மூலம் நாம் சிறு சிறு பாவங்களைக் கட்டிக் கொள்ள நேரிடலாம்.

அதிகமாக மது அருந்துவது ஒருவனை போதையில் ஆழ்த்துகிறது. இதுவே இந்தத் தீமையின் மிக மோசமான வடிவமாக இருக்கிறது. குடிகாரன் மதுபானத்தில் தன் அறிவை மூழ்கடிக்கிறான். அதனால் தான் செய்வது இன்னதென்று அவன் அறியாதிருக்கிறான். அவனது இந்தக் கெட்ட பழக்கம் அவனுக்கிருந்த நல்ல பெயரைக் கெடுத்து, மற்றவர்கள் அவனை இகழும்படி செய்து விடுகிறது. மிக அடிக்கடி அது அவனை வறுமைக்கும், அவமானத்திற்கும், அவனது குடும்பத்தை பசி, பட்டினிக்கும் ஆளாக்குகிறது. கோபம், சபிப்பது, சச்சரவு செய்வது, சண்டையிடுவது, திருடுவது, ஏமாற்றுவது ஆகியவை பெரும்பாலும் குடிப்பழக்கத்தின் விளைவுகளாக இருக்கின்றன.

இந்தத் தீமையின் காரணமாக ஒரு மனிதன் தன் மனைவி, பிள்ளைகளை அடிக்கலாம், ஏன், கொலை கூட செய்யலாம். அசுத்ததனத்தின் பாவங்கள் அதனோடு நெருக்கமாக இணைந்துள்ளன. குடித்து விட்டு வாகனங்கள் ஓட்டுபவர்களால்தான் எண்ணற்ற வாகன விபத்துக்கள் நேரிடுகின்றன. மிக அடிக்கடி இந்த விபத்துக்களால் அநேகர் காயமடைகிறார்கள், அவர்கள் இறக்கவும் நேரிடுகிறது. குடிகாரர்கள் பெரும்பாலும் தங்கள் போதை மயக்கத்திலேயே மரணமடைகிறார்கள். இதனால் தங்கள் பாவங்களுக்கு மனஸ்தாபப்பட அவர்களால் முடிவதில்லை. அப்படியானால்

அவர்களுடைய நித்திய முடிவு எத்தகையதாக இருக்கும்? "மோசம் போகாதேயுங்கள்; தூர்த்தரும், விக்கிரக ஆராதனைக் காரரும், விபச்சாரக் காரரும், சிற்றின்பப் பிரியரும், ஆணும் ஆணுமாய் மோகிக்கிறவர்களும், திருடரும், பொருளாசைக்காரரும், குடிவெறியரும், உதாசீனரும், கொள்ளைக் காரரும் சர்வேசுரனின் இராச்சியத்தைச் சுதந்தரிப்பதில்லை" என பரிசுத்த வேதாகமம் கூறுகிறது (1 கொரி.6:9,10).

துரதிருஷ்டவசமாக, முந்தின காலங்களில் குறித்துக் காட்ட முடிந்தது போல இப்போது குடிப்பழக்கம் ஆண் வர்க்கத்தை மட்டுமே சார்ந்ததாக இல்லை. மாறாக பெண்களிடையேயும் அது மிகப் பரவலாக ஆகியுள்ளது. மது அருந்துவது அவர்களை இன்னும் அதிகக் கேவலமான நிலைக்கு உள்ளாக்குகிறது.

போதையில் பல மட்டங்கள் உள்ளன. அறிவை ஒருவனிடமிருந்து முற்றிலுமாக அகற்றி விடுகிற முழுப் போதை, சாவான பாவமாக இருக்கிறது. தீவிரமான ஒழுங்கீனங்கள் இல்லாத வரைக்கும், குறைவான போதை அவ்வளவு மோசமான தீமையாக இல்லாதிருக்கலாம். பாவத்தின் அளவு ஒழுங்கீனத்தின் அளவுக்கு இசைவானது.

ஒருவனை அதிகமாகக் குடிக்கத் தூண்டுவதன் மூலம் அவனுடைய பாவத்தில் நாமும் பங்காளிகளாகக் கூடும். எனவே நட்புறவு, உபச்சாரம் ஆகியவற்றின் அடையாளமாக ஒருவருக்கு மதுவைக் குடிக்கத் தரும் போதும், சமூக விழாக்களில் மதுவைப் பரிமாறுகிற போதும், நாம் மிக மிகக் கவனமாக இருக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, ஒருவன் மது அருந்த மறுக்கிற போது அவனைக் கட்டாயப் படுத்துவதோ, அல்லது இளம் வயதினருக்கு அதிக போதை தரும் மதுவகைகளைத் தருவதோ தவறானது.

குடிப் பழக்கம், அதன் பல்வேறு தீமையான விளைவுகளின் காரணமாக, நம் காலத்தின் மிகப் பரவலான தீமைகளில் ஒன்றாக இருக்கிறது. ஆண்களும், பெண்களும், இளைஞர்களும், இளம்பெண்களும் அதற்குப் பலியாகிறார்கள். கடும் வெறுப்பு, விவாக ரத்து ஆகியவற்றைக் கொண்டு அது பல குடும்பங்களை அழிக்கிறது. தன் இரும்புப் பிடியில் சிக்கியிருக்கிற அனைவருடைய வாழ்வையும் அது சீரழிக்கிறது.

மது வகைகளைப் பயன்படுத்தும் போது மட்டுமிதமும், குடிவெறிக்கு உட்படாத நிதானமும் எப்போதும் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்று திருச்சபை கற்பிக்கிறது. அநேகர், என்றாவது ஒருநாள் எல்லைக் கோட்டைத் தாண்ட மாட்டார்கள், தொடக்கத்தில் அவ்வப்போது, சட்டத்திற்கு உட்பட்டு அவர்கள் அருந்திய மதுவின் காரணமாக பிற்பாடு ஒரு குடிகாரனாக ஆக மாட்டார்கள் என்பதற்கு, அவர்கள் மது அருந்துவதை முழுவதுமாக விலக்குவது மட்டுமே உத்திரவாதமாக இருக்கிறது.

இவ்விஷயத்தில் போதைப் பொருட்களின் துஷ்பிரயோகத்தைப் பற்றியும் நாம் இங்கு குறிப்பிட வேண்டும். சில நோய்களின் போது போதைப் பொருட்களைப் பயன்படுத்துவது அவசியமானதாக இருக்கிறது. ஆனால், ஒரு மருத்துவரின் பரிந்துரையின் பேரில் மட்டுமே அவை பயன்படுத்தப் பட வேண்டும். ஏனெனில் அவற்றைப் பயன்படுத்துவது ஒரு பழக்கமாக உருவாகி விடும் ஆபத்து அதில் இருக்கிறது.

## மட்டுமிதத்தால் பாதுகாக்கப் படுதல்

உண்பதிலும், குடிப்பதிலும் மட்டுமிதத்தோடு இருக்கக் கடுமையாக முயற்சி செய்யும் காரியத்தில் நம் ஆண்டவரின் ஒறுத்தல், உணர்ச்சிவசப்படாத சம நிலை, போதையை விலக்குதல், பரித்தியாகம் ஆகியவை நம்மைத் தூண்டும்

முன்மாதிரிகைகளாக இருக்கினறன. இவ்வாறே அர்ச்சிய-சிஷ்டவர்களின் முன்மாதிரிகையும் நமக்குப் பாடமாக உள்ளது. அவர்கள் எப்போதும் உணவு, மற்றும் மது ஆகியவற்றில் வீரத்துவமுள்ள கட்டுப்பாட்டைக் கடைப்பிடித்தனர். அதன் மூலம் அவர்கள் தங்கள் பசி, தாகத்தைத் தங்கள் கட்டுப்பாட்டுக்கு உட்படுத்தியிருந்தனர். இதன் மூலம் தங்கள் ஆத்தும சுதந்திரத்தை அவர்கள் காத்துக் கொண்டதோடு, தங்கள் ஞான பலத்தையும், ஆற்றல் வளத்தையும், தைரியத்தையும் பெருக்கிக் கொண்டனர்.

உபவாசம், அல்லது உணவின் காரியத்தில் பரித்தியாகம் மற்றும் சுய-மறுதலிப்பு என்பது சில குறிப்பிட்ட சமயங்களில் திருச்சபையால் கட்டளையாகத் தரப்படுகின்றது. மிதமான, ஒழுங்குபடுத்தப்பட்ட உபவாசம் சரீரத்தின் ஆரோக்கியத்தையும், பலத்தையும் கூட நல்ல முறையில் பாதுகாக்கிறது. அது மனத்தை விழிப்புள்ளதாக்கி, இழிந்த ஆசாபாசங்களைக் கட்டுப்படுத்த உதவுகிறது; மற்ற புண்ணியங்களை அனுசரிப்பது இதனால் எளிதாகிறது. வழக்கமாகவே, தான்தோன்றியான, கட்டுப்பாடற்ற வாழ்வு முறையையே நம் மனம் விரும்புகிறது. உபவாசம் இந்த நிலையிலிருந்து நம்மைப் பாதுகாக்கிறது.

உண்பதிலும் குடிப்பதிலும் உள்ள இன்பம் தன்னிலேயே ஒரு முடிவு அல்ல, மாறாக அது உயிரைக் காத்துக் கொள்ளும் ஒரு வழி ஆகும். உண்பதற்காக வாழாமல், வாழ்வதற்காக உண்பது என்னும் பண்டைய விதிதான் போசனப் பிரியத்தைத் தவிர்ப்பதில் நம்மை வழிநடத்துகிற கொள்கையாக இருக்கிறது. “நீங்கள் சாப்பிட்டாலும், குடித்தாலும், வேறெதைச் செய்தாலும், எல்லாவற்றையும் சர்வேசுரனுடைய மகிமைக்காகவே செய்யுங்கள்” என்று அர்ச். சின்னப்பர் அறிவுறுத்துகிறார் (1 கொரி. 10:31).

*அத்தியாயம் 7*

# சோம்பல்

சோம்பல் என்பது சரீர சோம்பலையும் குறித்தாலும், முக்கியமாக அது ஞான சோம்பலையே குறிக்கிறது. ஒரு குறிப்பிட்ட தேவ நம்பிக்கையின்மையால்தான் இது உண்டாகிறது. இது நம் அர்ச்சிப்புக்கு அவசியமான வழிமுறைகளைப் பயன்படுத்துவதில் நாம் அலட்சியமாய் இருக்கச் செய்கிறது. இது ஞான ஊக்கத்தின் மீதான ஒரு வெறுப்பு ஆகும். இதன் விளைவாக நாம் வரப்பிரசாதத்தை மறுதலிக்கிறோம். நாம் சாவான பாவம் கட்டிக் கொண்டவுடனேயே சர்வேசுரனிடம் திரும்பி வருவதை இது தள்ளிப் போடச் செய்கிறது என்பதுதான் இதன் மிக மோசமான விளைவாக இருக்கிறது. பாஸ்குக் கடமையை அலட்சியம் செய்தவர்களும், திருச்சபையிலிருந்து பிரிந்து சென்றவர்களுமாகிய எத்தனை ஆத்துமங்கள் சோம்பலின் கட்டுக்களை முறித்தெறிய முடியாத காரணத்தால், தங்கள் நித்திய இரட்சணியத்தை ஆபத்துக்கு உள்ளாக்கிக் கொண்டு, வருடக் கணக்கில், தங்கள் பாவ நிலையிலேயே தொடர்ந்து வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்!

சோம்பல் நம் மனத்திலும், சித்தத்திலும் குடியிருக்கிறது. இதுவே எல்லாத் தீமைகளிலும் மிக ஆபத்தான தீமையாகும். ஏனெனில் நாம் வரப்பிரசாதத்தோடு ஒத்துழைக்க மறுக்கும்படி இது செய்து விடுகிறது. அது நம்மைப் பாவப் பழக்கங்களில் சார்புள்ளவர்களாக ஆக்குகிறது; அந்தப் பழக்கங்களின் அடிமைத்தனத்திலிருந்து விடுபடவே முடியாதோ என்ற கடும் அச்ச உணர்வை நம்மில் ஏற்படுத்தி விடுகிறது. இவ்வாறு அது நம் மரண வேளையில் கூட மனந்திரும்ப முடியாத நிலைக்கு நம்மைக் கொண்டு சென்று, நம் ஆத்துமத்தை நித்தியத்திற்கும் இழந்து போகக் காரணமாகி விடுகிறது.

நம் மந்தநிலை, வெதுவெதுப்பு, தேவ ஊழியத்தில் அலட்சிய மனநிலை ஆகியவை, எண்ணற்ற அற்பப் பாவங்களுக்குக் காரணமாகின்றன. இந்த அற்பப் பாவங்கள் தங்கள் பங்கிற்கு நம் சித்தத்தைப் பலவீனப்படுத்துகின்றன. நாம் ஒரு வலையில் சிக்கிக் கொண்டிருப்பதை உணர்கிறோம், ஆனாலும் அதை அறுத்தெறிய நாம் விரும்புவதில்லை.

ஞான காரியங்களில் நமது வலுவற்ற மனநிலை, நமது அசமந்தமான சித்தம், காலம் கடத்துதல், அதாவது முக்கிய காரியங்களை வேறொரு நேரத்திற்குத் தள்ளி வைத்தல், நம்மைப் பராக்கிற்கு உட்படுத்தி, நம் ஆத்துத்தின் தேவைகளைக் கவனிக்க நேரமில்லாமல் செய்கிற ஒருவித படபடப்பான செயல்பாடாக இருக்கிற, வீணான, பயனற்ற நம் உழைப்பு, உடல் சொகுசையும், சௌகரியத்தையும் தேடும் நம் மனநிலை, நம் செயலற்ற நிலை, அல்லது எந்த நன்மையுமே செய்யாதிருத்தல் ஆகியவற்றைக் கொண்டு சோம்பலானது எவ்வாறு நம்மைப் பாதிக்கிறது என்பதை நாம் அடையாளம் காண முடியும்.

சோம்பலால், நம் அந்தஸ்தின் கடமைகளை அலட்சியம் செய்கிறோம்; நம் பிரதிக்கினைகளை நிறைவேற்றும் முயற்சிகளை அது கைவிடச் செய்கிறது; நம் வரப்பிரசாதங்களை நாம் பயன்படுத்தாமல் இருக்கிறோம் என்ற அறிவு நம்மைத் துயரத்திலும், சோகத்திலும் ஆழ்த்துகிறது; நம்மை ஒப்புக் கொடுப்பதில் நாம் தாராளமானவர்களாக இல்லை என்பதால் எல்லாக் காரியங்களையும் நாம் விருப்பமில்லாமலும், முணுமுணுப்போடும் செய்யச் செய்கிறது; நம் கணக்கைச் செலுத்த நாம் மனமில்லாதவர்களாய் இருப்பதாலும், அதனால் நம் ஞான ஆற்றல்களை நாம் வீணாக்கி, நம் மனந்திரும்புதலைத் தள்ளிப் போடுவதாலும், சோம்பலானது அதிகம் பேசுவதில் ஆர்வமுள்ளவர்களாகச் செய்கிறது.

அர்ச் மத்தேயு சுவிசேஷத்தில் நம் ஆண்டவரால் சொல்லப் படுகிற சோம்பேறியான ஊழியனைப் பற்றிய உவமை (25:14-30), சோம்பலின் ஆபத்துக்களையும், பலனற்ற தன்மையையும், அதன் முடிவான **நரகத்தையும்** பற்றி நம்மை எச்சரிக்கிறது.

சோம்பலில் மூன்று முக்கிய வகைகள் உள்ளன: ஒன்று **தேவையற்ற காரியங்களால் ஆக்கிரமிக்கப் பட்டிருத்தல்**; நம் மனச்சான்றின் குரலைக் கவனிக்க நேரமில்லாமல் போகும் அளவுக்கு, இந்த வகை சோம்பலினால் நாம் எவ்வாறு நம்மையே திசைதிருப்பிக் கொள்கிறோம் என்பதை மேற்கண்ட பகுதிகளில் நாம் போதுமான அளவுக்கு விவரித்தாயிற்று. மற்ற இரண்டு வகைகள்: **பராக்கு,** மற்றும் அச்சம் தரும் **ஞானச் சோர்வு** ஆகியவை.

பராக்கு, ஜெபத்தில் நமது தியானவுணர்வை அழிக்கிறது; பக்திப்பற்றுதலும், கவனமுமின்றி நம் ஞான முயற்சிகளை நிறைவேற்றச் செய்கிறது; இங்கு, இப்போது செய்ய வேண்டிய காரியத்தை நாம் தள்ளிப்போடுமாறு, நம்மை அடித்து வீழ்த்துகிற ஒரு களைப்பால் நம்மை நிரப்புகிறது. நம் கடமைகளை சர்வேசுரனுக்காகச் செய்வதில் உள்ள சலுகையையும், அதைக் கொண்டு பரலோகத்தில் நித்தியப் பேறுபலனைச் சேர்த்து வைப்பதையும் தேடாமல், நம் கடமைகளைத் தாங்க முடியாத சுமையாக மட்டுமே நாம் பார்க்கிறோம்.

அச்சந் தருகிற ஞானச் சோர்வு, அல்லது ஊக்கமின்மை என்பது நம் மீதே நாம் கொள்ளும் ஒரு இரகசியக் கோபமாகவும், ஒரு வித சுய நேசமாகவும் இருக்கிறது. இதன் காரணமாக, நம் குற்றங் குறைகளையும், நம் பாவப் பழக்கத்தையும் உடைத்தெறிய நமக்குத் தைரியம் இருக்காது. அதனால் ஒரு விதப் பேரச்ச உணர்வை எப்போதும் நாம்

உணர்கிறோம். இது தன் பங்கிற்கு நம்மை சண்டை, சச்சரவு செய்கிறவர்களாக ஆக்குகிறது. நம் உள்ளரங்கப் போராட்டங்களிலிருந்தும், கவலையிலிருந்தும் தப்பிக்க விரும்பி நாம் சிருஷ்டிகளிடம் திரும்பி, தேவையற்ற காரியங்களால் ஆக்கிரமிக்கப் படுகிறோம். அதே வேளையில் நம் அசமந்த நிலை, காலந் தாழ்த்துதல், வெதுவெதுப்பான நிலை அல்லது பாவம் ஆகியவை தொடர்ந்து நீடிக்கிறது.

நமது ஞானச் சோர்வானது பசாசுக்கு நம் ஆத்துமத்தின் மீது வல்லமை தருகிறது. அது பல மோசமான பாவங்களுக்கு எளிதாக இழுத்துச் செல்லக்கூடிய ஆத்தும நிலையாக இருக்கிறது. தேவத்திரவிய அனுமானங்களின் நற்பாதிப்புகளை அது பலவீனப்படுத்தி, அவற்றைத் தடுக்கிறது. ஞான ஜீவியத்தின் உத்தமமான வழிகள் நம் மட்டில் ஒரு விஷத்தைப் போலச் செயல்படச் செய்து விடுகிறது. சர்வேசுரனைக் கண்டடைய நம்மால் முடிவதில்லை. சர்வேசுரன் தருகிற ஆறுதல்களைத் தேடுகிற அளவுக்கு அவரை நாம் தேடுவதில்லை, நம் ஆசைகள், நற்கீர்த்தி ஆகியவை பற்றி நாம் கவலைப்படுகிற அளவுக்கு, அவருடைய சித்தத்தையும், மகிமையையும் நாம் பெரிதாக எண்ணுவதில்லை. என்றாலும், அவரைக் கண்டுபிடிக்க முடியாததால், நம் மகிழ்ச்சியற்ற நிலை அதிகரிக்கிறது. நம் சொந்த ஞான சமாதானமும், முன்னேற்றமும், அதாவது ஞான முறையிலான சுய தேடலுமே நம் குறிக்கோளாக இருக்கின்றனவே அன்றி, சர்வேசுரனை நாம் தேடுவதில்லை. நம் சொந்த இறுதிக் கதியையும், அதை அடைவதற்கான வழியையும் பற்றிய பார்வையை நாம் இழந்து போகிறோம்.

சுவாமி ஃபேபர் ஆத்துமத்தின் இந்த நிலையைக் குறித்து இவ்வாறு பேசுகிறார்: "துயரம் என்பது ஒரு விதமான ஞான இயலாமை ஆகும். ஞானச் சோர்வுள்ள ஒரு மனிதன்

சர்வேசுரனுடைய இல்லத்தில், நோய் நீங்கி படிப்படியாக சுகம் பெற்று வருகிற ஒருவனாக மட்டுமே இருக்க முடியும். அதற்கு மேலான ஒரு நிலைக்கு அவன் ஒருபோதும் உயரவே முடியாது. அவன் சர்வேசுரனைத் தனது தந்தையாகவும், அரசராகவும் கண்டு அவருக்குப் பணிவிடை செய்வதற்குப் பதிலாக, அவர்தான் அவனுடைய மருத்துவராக இருந்து அவனைக் கவனித்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. . . . சிடுசிடுப்பான மனநிலை, உணர்ச்சிகளுக்கு அடிமைகளா-யிருத்தல் ஆகியவற்றில் உள்ள தார்மீக மந்த புத்தியை விடப் பெரிதான மந்தபுத்தி எதுவுமில்லை. தன் வாழ்நாள் முழு-வதும், நோய்ப்படுக்கையில் இருப்பது போல, வறியதாகவும், தளர்ச்சியுற்றதாகவும் விழுந்து கிடக்கிற ஒரு ஆத்துமம், சர்வேசுரனுக்காக என்னதான் செய்து விட முடியும்?"

இன்று, சோம்பல் அடிக்கடி, சாக்குப்போக்குகளின் மூலம் குற்றச்சாட்டுகளிலிருந்து தப்பித்துக் கொள்ளுதல் என்ற பெயரால் குறிப்பிடப் படுகிறது. சோம்பலுக்குப் பலியான ஒருவன், தான் ஒரு ஞான மூடுபனியாக, அதாவது ஞானத் தெளிவற்ற நிலையில், இருப்பதை உணர்கிறான். அவன் அந்நிலையில் இருப்பதற்கான உண்மையான காரணம், **சிநேகத்தை அழிக்கிற சித்தத்தின் செயலற்ற நிலை**தான். ஆனால் அவன் அதை மறைத்து, தனது ஞான வறட்சி, அல்லது வேறு ஏதோ ஒரு காரியம்தான் அதற்குக் காரணம் என்று குற்றம் சாட்ட முயற்சி செய்யக் கூடும்.

நம் வாழ்நாள் முழுவதும் தடுமாற்றத்தோடு வாழ்ந்து, சோம்பல்தான் ஞான ஜீவியத்தில் நம்மை முன்னேற விடா-மல் தடுக்கிறது என்பதை நாம் ஒருபோதும் கண்டுபிடிக்க முடியாமல் இருக்கலாம். சோம்பல் எத்தனை பேரை தேவத் திரவிய அனுமானங்களைப் பெறுவதினின்றும், அனுதினப் பூசையினின்றும், திவ்ய நன்மை உட்கொள்வதினின்றும்

தடுத்து வைத்திருக்கிறது என்பதை ஒருவரும் அறியார். நம் ஞான ரீதியானதும், லௌகீகமானதுமாகிய பிறர் சிநேகச் செயல்களைக் கொண்டே நாம் தீர்ப்பிடப்படுகிறோம். இத்தகைய இரக்கச் செயல்கள் சோம்பலின் காரணமாக, எவ்வளவு அதிகமாக அலட்சியம் செய்யப்படுகின்றன என்பதை யாரும் கண்டுபிடிக்க முடியாது. ஆனாலும், இந்தத் தீமையானது எண்ணற்ற வழிகளில் பெரும் சேதங்களை விளைவிக்கிறது என்பது நிச்சயம்.

பயனுள்ள காரியங்களாலும், தீவிர உழைப்பாலும் நம் புத்தியை ஆக்கிரமித்துக் கொள்வதை நாம் அலட்சியப் படுத்தும்படி செய்து விடுகிற மனச் சோம்பலும் கூட மிக ஆபத்தானது. ஏனெனில் இவ்வாறு தன்னை நிரப்பிக் கொள்ளாத ஒரு மனம் தீமையை நோக்கிச் செல்கிறது. அதன் வேகமான அழிவை எதுவும் தடுத்து நிறுத்த முடியாது. நம் சரீரம் சுறுசுறுப்பான காரியங்களில் ஈடுபட்டிருக்கும்போதும் கூட நம் மனம் நல்ல, பயனுள்ள சிந்தனைகளால் நிரப்பப் படலாம். இதற்கு மாறாக, சரீர சோம்பல், அல்லது வேலை-யற்ற, செயலற்றதனம், ஆயிரக்கணக்கான சோதனைகளுக்-குள் நம்மை இழுத்துச் சென்று விடும். சோம்பலின் செயலற்ற நிலையில் தூங்கிக் கொண்டிருக்கும் நம் சித்தத்தின் பலவீனம், அசமந்தம் ஆகியவை காரணமாக அந்த சோதனைகளை எதிர்த்து நிற்க நம்மால் முடியாது.

சோம்பலானது, நாம் இரட்சணியத்தைப் பெற்றுக் கொள்ள விடாமல் தடுப்பதாலும், அது பல தீமைகளுக்குத் தாயாக இருப்பதாலும், அதனிடமிருந்து நாம் பறந்தோடிப் போக வேண்டும். எதையும் விதைக்காதவன், எதையும் அறுவடை செய்ய முடியாது. நம் வாழ்வு குறுகியது, பரலோக நித்தியப் பேரின்பத்தை சுதந்தரித்துக் கொள்ள நமக்கு மிகச் சில வருடங்களே இருக்கின்றன. கடும்

உழைப்பு, ஒறுத்தல்கள், திருப்பாடுகள், திருச் சிலுவை ஆகியவற்றால் பரலோக மகிமையை வெற்றி கொண்ட நம் ஆண்டவரின் முன்மாதிரிகையை நாம் பின்பற்ற வேண்டும். நித்தியப் பேறுபலன்களைச் சேர்த்து வைக்கத் தவறுவது என்பது பரலோகத்தில் நம் தகுதியைக் குறைப்பதாகும். நம் பாவங்களுக்குப் பரிகாரம் செய்யத் தவறுவது என்பது ஒரு நீண்ட உத்தரிக்கிற ஸ்தலத்து வேதனைக்கு நம்மை ஆயத்தம் செய்வதாகும். நித்திய இரட்சணியத்தைப் பெற்றுக் கொள்ளத் தவறுவதோ, முழுவதுமாகத் தவறிப் போய், நித்திய ஆக்கினையின் சாபத்தை அறுவடை செய்வதாகும்.

சர்வேசுரனுக்காகவும், ஆத்துமங்களின் நன்மைக்காகவும் விழிப்பாயிருந்து மிகுந்த ஆர்வத்தோடு உழைப்பது என்பது சோம்பலுக்கு எதிரான புண்ணியமாகும். அது நம் வேதக் கடமைகளை நிறைவேற்றுவதை இலகுவானதாகவும், மகிழ்ச்சி நிறைந்ததாகவும் மாற்றுகிறது. நற்கிரியைகளின் எண்ணெயால் விசுவாச ஒளி போஷிக்கப் படுகிறது. பல சோதனைகளையும், பாவங்களையும் தவிர்ப்பதற்கு அது நமக்கு உதவுவதோடு, நம் கடைசி நிலைமை வரத்தை உறுதிப் படுத்துவதிலும் நமக்கு உதவுகிறது.

## சோம்பலுக்கான தீர்வு

சோம்பலை எதிர்த்துப் போராடுவதற்கு நாம் நம்மில் உள்ள சோம்பலின் மீதான நாட்டங்களுக்கு எதிராக வன்முறையை பயன்படுத்த வேண்டும்; மேலும் ஜெபத்திலும், தேவத் திரவிய அனுமானங்களிலும் உதவி தேட வேண்டும். பொதுத் தீர்வை நாளை நாம் நினைவில் கொள்ள வேண்டும். நமது மந்தமான சித்தத்தைத் தட்டியெழுப்ப ஞான வாசகம் நமக்கு உதவும். ஆயினும் எல்லாவற்றிற்கும் மேலாக, இஸ்பிரீத்து சாந்துவானவரிடம் பக்தி

கொண்டிருப்பது மிகுந்த வல்லமையுள்ளதாக இருக்கும். ஏனெனில், சிநேகமல்ல, பயமே சோம்பலைத் தூண்டி நடத்துகிற ஆதாரமாக இருக்கிறது. இஸ்பிரீத்து சாந்துவானவரோ நேசத்தின் இஸ்பிரீத்துவாகவும், அதன் ஆதாரமாகவும் இருக்கிறார். சோம்பலுக்கு எதிரான மாற்று மருந்தாகிய தேவ சிநேகத்தைக் கண்டடையும்படி நாம் அவரிடம்தான் செல்ல வேண்டும். நம் இருதயங்களுக்குள் சிநேகத்தை ஊற்றும்படியாக அவரிடம் நாம் கெஞ்சி மன்றாட வேண்டும்.

*அத்தியாயம் 8*

# பாவத்தின் ஏழு வேர்கள்

ஏழு தலையான பாவங்களாகிய இந்த ஏழு வேர்களி-லேயே நம் எல்லாப் பாவங்களையும் நாம் அடையாளம் கண்டு கொள்ள முடியும். பாவத்தின் இந்த ஏழு ஆதாரங்-களும், சரீரத்தைப் பாதிக்கிற நோய்களோடு ஒப்பிடப் பட்டிருக்கின்றன. **ஆங்காரம்** ஞானப் **புற்று நோயாகும்**. அது நம் உயிர்த்துடிப்பைத் தின்று அழித்து விடுகிறது. **உலோபித்தனம்** என்பது ஞான **எலும்புருக்கி** நோய், அல்லது காச நோயைப் போன்றது. அது ஆத்துமத்தின் உள்-ளார்ந்த வல்லமைகளைப் பாழாக்கி விடுகிறது. **மோகம்** என்பது ஞானத் **தொழுநோயாகும். கோபம்** ஒரு **விஷக் காய்ச்சலாகும். பொறாமையோ இரத்த நச்சுத்தன்மை** ஆகும். **போசனப் பிரியம்** மரணத்தில் முடியக் கூடிய ஒரு வகை **உறக்க நோய்** ஆகும். **சோம்பல்** என்பது ஆத்துமத்தின் **பக்கவாதம்** ஆகும். அது அந்த ஆத்துமத்தின் முன்னேற்றத்-தைத் தடுத்து, வரப்பிரசாத வழிகளை நாம் அலட்சியம் செய்யச் செய்கிறது; நம் இரட்சணியத்தில் கவலையற்றவர்-களாக இருக்கச் செய்கிறது; மரண வேளையிலும் நாம் மனந்திரும்பாதபடி தடுத்து விடுகிறது. மரண வேளையிலும் மனந்திரும்பாத இந்தப் பரிதாப நிலைக்கு, ஆங்காரமும், சோம்பலுமே பெற்றோராக இருக்கின்றன.

இந்தத் தலையான பாவங்களின் இயல்பையும், விளைவு-களையும் புரிந்து கொள்வதே, அவற்றை எதிர்த்துப் போராடு-வதற்கான முதற்படி ஆகும். எனவே நம் போராயுதங்களை ஏந்தி, போர்க்களத்துக்குச் செல்வோமாக! எப்படி இருக்க **சித்தங்** கொள்கிறோமோ, அப்படியே நாம் இருப்போம்!

*அத்தியாயம் 9*

## சேசுநாதர், நம் முன்மாதிரிகை

அவருடைய நடத்தையையும், செயல்களையும் உன் இருதயத்தில் ரூபிகரம் செய்து கொள். சகல மனிதர்களுக்கும் மத்தியில் அவருடைய இருத்தலானது, எவ்வளவு சாந்தமும், அமைதியுமுள்ளதாயிருக்கிறது! அவருடைய சொந்த மக்களிடையே, அவர் எத்துணை அன்போடு பழகுகிறவராக, ஊக்கமும், மகிழ்ச்சியும் தருகிறவராக இருக்கிறார்! உண்பதிலும், பானம் பண்ணுவதிலும் எவ்வளவு கட்டுப்பாடு உள்ளவராயிருக்கிறார்! ஏழைகள் மட்டில் அவர் எவ்வளவு இரக்கமுள்ளவராயிருக்கிறார்! எல்லாக் காரியங்களிலும் அவர்களைப் போலவே தம்மை ஆக்கிக் கொண்டவர் அவர்; அவருடைய சொந்த உள்ளார்ந்த வட்டத்திற்குள்தான் அவர்கள் இருக்கிறார்கள். எந்த அளவுக்கு யாரையும் புறம்பே தள்ளிவிடாதவராக அவர் இருந்தார்! எந்த அளவுக்கு யாரிடமிருந்தும், குஷ்டரோகிகளிடமிருந்தும், பாவியிடமிருந்தும், இழிந்தவர்களிடமிருந்தும், வெட்கமற்றவர்களிடமிருந்தும் கூட அவர் தம்மைச் விலக்கிக் கொள்ளாதவராக இருந்தார்!

உயர்ந்த நிலையினரிடம் எவ்வாறு அவர் நயந்து நடவாதிருந்தார்! எவ்வாறு அவர் யாரிடமும் அடிமையின் பணிவும், முகஸ்துதியும் காண்பிக்காதிருந்தார்! எந்த அளவுக்கு உலகக் கவலைகளிலிருந்து தம்மை அவர் உயர்த்தி வைத்திருந்தார்! எந்த அளவுக்கு அவர் தமது சரீரத்தின் தேவைகளை சட்டை பண்ணாமலிருந்தார்! அவருடைய கண்கள் எவ்வளவு கட்டுப்பாடுள்ளவையாக இருந்தன! பரிகசிக்கப்பட்ட போது அவர் எவ்வளவு பொறுமையோடு நின்றார்! அவருடைய பதில்கள் எவ்வளவு மென்மையாயிருந்தன! எந்த அளவுக்கு ஒரு கூர்மையான, அல்லது

கசப்புள்ள பதிலால் தமது மகிமையை அவர் வெளிப்படுத்-தாமல் இருந்தார்! எவ்வாறு அவர் தமது மௌனத்தாலும், அமைதியாலும், சத்தியத்தை உறுதிப் படுத்தியதாலும், தமது நேசத்தைத் தந்ததாலும் பழிவாங்கும் வன்ம உணர்வை விலக்கினார்! மேலும், அவருடைய ஒவ்வொரு அசைவும் எவ்வளவு கம்பீரமும், அமைதியுமுள்ளதாயிருந்தது! அவருடைய ஒவ்வொரு செயலும் எந்த அளவுக்கு எந்தக் குறையுமின்றி இருந்தது!

யார் மேல் வைத்த சிநேகத்திற்காக மனிதனாகவும், மரிக்கவும் அவர் சித்தங் கொண்டாரோ, அந்த ஆத்துமங்-களின் இரட்சணியத்திற்காக அவர் எவ்வளவு ஏங்கினார்! தமது நடத்தை முழுவதிலும் எவ்வாறு அவர் சகல நன்மை-களுடையவும் முன்மாதிரிகையாகவும், சகல மனிதருக்கும் ஒளியாகவும், அவர்களது வழியாகவும், அவர்களது சத்திய-மாகவும், அவர்களது ஜீவியமாகவும் இருந்தார்!

மீளவும், உழைப்பின் கடுமையையும், குறைபாடுகளை-யும், பசி, தாகத்தையும், கடும் களைப்பையும் அவர் எவ்வாறு தாங்கிக் கொண்டார்! துன்புறுகிற அனைவரிடமும் அவர் எவ்வளவு தயையுள்ளவராக இருந்தார்! எவ்வாறு பலவீனர்-களுக்கு ஒத்த விதமாக அவர் தம்மை மாற்றிக் கொண்டார்; தாழ்ந்தவர்களுக்கு முன்பாக அவர் எந்த அளவுக்குத் தம்மையே எளிமைக்கு உட்படுத்தினார்! துர்மாதிரிகையை அவர் எவ்வாறு விலக்கினார்! எப்படி எந்தப் பாவியையும் மறுதலிக்காதிருந்தார்! மனந்திரும்பிய ஒவ்வொருவரையும் எவ்வளவு இரக்கத்தோடு வரவேற்றார்! எந்த அளவுக்குத் தம் வார்த்தைகளில் சமாதானமுள்ளவராகவும், நல்ல மனமுள்ள-வர்களுக்கு உத்வேகமாகவும் இருந்தார்! இறுகிய இருதயங்-களிடம் அவர் எவ்வளவு கடுமையாயிருந்தார்! ஜெபிக்க அவருக்கு எவ்வளவு ஏக்கம்! ஊழியஞ் செய்வதில் எவ்வளவு

*வேகம்! "ஓர் ஊழியனைப் போல நான் உங்கள் மத்தியில் இருக்கிறேன்" என்று அவர் தம்மைப் பற்றிக் கூறுகிறார்.*

*மீளவும், ஜெபத்தில் எத்தனை மணித்தியாலங்களை அவர் செலவிட்டார்! தம் பெற்றோருக்கு எவ்வளவு கீழ்ப்படிந்திருந்தார்! பெருமையடித்துக் கொள்வதன் ஒவ்வொரு அடையாளத்தையும், தனிப்பட்டவராயிருப்பதன் ஒவ்வொரு காட்சியையும் அவர் எவ்வாறு வெறுத்துத் தள்ளினார்! எவ்வாறு அவர் இந்த உலக மகிமை அனைத்தையும், இந்த உலக அதிகாரம் அனைத்தையும், இந்த உலக வெற்றியின் வழிகள் அனைத்தையும் தவிர்த்தார்!*

*அவரைப் பற்றி நாம் சிந்திக்கிற போது, இந்த எல்லாச் சிந்தனைகளும், இன்னும் அதிகமான சிந்தனைகளும் நம் மனத்தில் எழுகின்றன. நம் ஒவ்வொரு சொல்லுக்கும், செயலுக்கும், அசைவுக்கும், நிற்றலுக்கும், அமர்தலுக்கும், உண்பதற்கும், அமைதியாயிருப்பதற்கும், பேசுவதற்கும், தனியாயிருப்பதற்கும், மற்றவர்களோடு இருப்பதற்கும் முன்மாதிரிகைகளை நாம் அவரில் காணலாம். அவருடைய நட்புறவில் நீங்கள் இனிமையையும், நம்பிக்கையையும் பெற்றுக் கொள்வீர்கள். அவருடைய ஒவ்வொரு புண்ணியத்தாலும் நீங்கள் பலப்படுத்தப் படுவீர்கள்.*

*அவரை எப்போதும் மனத்தில் கொண்டிருப்பதும், அவரைக் கண்டுபாவிப்பதும், அவருடைய சிநேகத்தை உங்களுக்கென சம்பாதித்துக் கொள்வதுமே உங்கள் ஞானமாகவும், உங்கள் தியானமாகவும், உங்கள் ஆராய்ச்சியாகவும் இருக்கக் கடவன.*

*--அதிமேற்றிராணியார் கூடியர், சே. ச.*

# ஜெபங்கள்

## இஸ்பிரீத்து சாந்துவின் ஏழு கொடைகளுக்கான ஜெபம்

ஓ ஆண்டவராகிய சேசு கிறீஸ்துவே, தேவரீர் பரலோகத்திற்கு ஆரோகணமாகிப் போகுமுன், உமது அப்போஸ்தலர்களுடையவும், சீடர்களுடையவும் ஆத்துமங்களில் தேவரீர் தொடங்கிய வேலையை முடிக்கத் தக்கதாக உம்முடைய இஸ்பிரீத்து சாந்துவை அனுப்புவதாக வாக்களித்தீரே. அதே இஸ்பிரீத்து சாந்து, உமது வரப்பிரசாதத்தினுடையவும், சிநேகத்தினுடையவும் வேலையை என் ஆத்துமத்தில் பூரணமாக்கும்படி, அவரை எனக்குத் தந்தருளத் தயைசெய்வீராக.

இந்த உலகத்தின் அழியக் கூடிய வஸ்துக்களை நான் நிந்தித்து, நித்தியமானவைகளின் பேரிலேயே தாகங் கொண்டிருக்கும்படியாக, **ஞானத்தின்** கொடையையும், உமது தெய்வீக சத்தியத்தின் ஒளியினால் என் மனத்தை ஒளிர்விக்கும்படியாக, **புத்தி** என்னும் கொடையையும், சர்வேசுரனைப் பிரியப்படுத்தி, மோட்சத்தை அடைந்து கொள்ளத் தக்கதாக, **விமரிசை** என்னும் கொடையையும், உம்மோடு என் சிலுவையை நான் சுமந்து உம் பிறகே வரவும், என் இரட்சணியத்திற்கு விரோதமான எல்லாத் தடைகளையும் திடதைரியத்தோடு வெல்லவும் தக்கதாக, **திடம்** என்னும் கொடையையும், அடியேன் தேவரீரையும், என்னையும் அறிந்து கொள்ளவும், அர்ச்சியசிஷ்டவர்களின் வழியில் உத்தமதனத்தில் வளரவும் தக்கதாக, **அறிவு** என்னும் கொடையையும், சர்வேசுரனுடைய ஊழியமானது எனக்கு மதுரமானதாகவும், மனதிற்கு உகந்ததாகவும் நான் காணத்

தக்கதாக, **பக்தி** என்னும் கொடையையும், சர்வேசுரன் மீது ஒரு நேசமுள்ள சங்கையினால் நான் நிரப்பப்படவும், எந்த விதத்திலும் அவரை வேதனைப்படுத்த அச்சப்படவும் தக்கதாக, **தேவபயத்தின்** கொடையையும் எனக்குத் தந்தருளும்.

பிரியமான ஆண்டவரே, உமது உண்மையான சீஷர்களுடைய அடையாளத்தை என் மீது பொறித்தருளும். சகல காரியங்களிலும், உமது தேவ இஸ்பிரீத்துவானவரைக் கொண்டு என்னை நடப்பித்தருளும். ஆமென்.

## புண்ணியங்களை அடைந்து கொள்வதற்காக மிகப் பரிசுத்த கன்னிமாமரியை நோக்கி ஜெபம்

ஓ கிருபைதயாபத்துக்கு மாதாவாகிய மரியாயே, பிறர் தாங்கள் விரும்புகிற சரீர சுகம், உலகப் பொருட்கள், அனுகூலங்கள் ஆகியவற்றை உம்மிடம் மன்றாடக் கூடும். நானோ, எனக்கு எதெல்லாம் மிகவும் அவசியமென்று தேவரீர் காண்கிறீரோ, அவற்றையும், உமது மாசற்ற இருதயத்திற்கு முற்றிலும் இசைவானதையும் எனக்குத் தந்தருளும்படி உம்மை மன்றாடுகிறேன். தேவரீர் மிகுந்த தாழ்ச்சியுள்ளவராக இருக்கிறீர். எனக்கு தாழ்ச்சியையும், அவமானங்களை நேசிக்கும் வரத்தையும் பெற்றுத் தாரும். ஜீவியத்தினுடைய துன்ப துரிதங்களில் நீர் வெகு பொறுமையாயிருந்தீர். பொறுமையையும், திடத்தையும் எனக்குப் பெற்றுத் தாரும். உமது அயலாரின் மட்டில் நீர் மிகுந்த நேசமுள்ளவராய் இருந்தீர். சகலரையும், விசேஷமாக எந்த வகையிலாவது எனக்கு விரோதிகளாய் இருக்கிறவர்களையும் நேசிக்கும் வரத்தை எனக்கு அடைந்து தாரும். சர்வேசுரன் மீதுள்ள சிநேகத்தினால் நீர் நிறைந்திருக்கிறீர்; அவருடைய மாசற்ற, பரிசுத்த சிநேகத்தின் கொடையை எனக்குப் பெற்றுத் தாரும்.

தேவ சித்தத்தோடு நீர் முழுவதுமாக இணைந்திருக்கிறீர்; சகலத்திலும் தேவ சித்தத்திற்கு முழுவதும் ஒத்திருக்கும் வரத்தை எனக்குப் பெற்றுத் தாரும். ஓ மரியாயே, தேவரீர் சகல சிருஷ்டிகளிலும் அதிக பரிசுத்தவதியாக இருக்கிறீர். என்னை ஒரு அர்ச்சியசிஷ்டவன் ஆக்கியருளும்.

என்னை நேசிப்பது உமக்கு அவசியமே இல்லை. ஆனாலும் உம்மால் ஆகாதது ஒன்றுமில்லை. எனக்கு அவசியமான சகலத்தையும் பெற்றுத் தர தேவரீர் சித்தங் கொண்டிருக்கிறீர். ஆதலால் உம்மிடம் தஞ்சமடைவதை நான் அலட்சியப் படுத்துவது, அல்லது உமது பரிந்துரையில் மிகக் குறைவான நம்பிக்கை கொண்டிருப்பதுதான் உமது உபகாரங்களை நான் பெற்றுக் கொள்ள முடியாமல் தடுக்கிற ஒரே காரியமாக இருக்கும். இந்தக் கொடைகளைப் பெற்றுக் கொள்வேன் என்ற உறுதியான நம்பிக்கையோடு, அவற்றை உம்மிடம் கேட்கிறேன், ஓ மரியாயே, என் தாயாரே, என் நம்பிக்கையே, என் நேசமே, என் சீவியமே, என் தஞ்சமே, என் உதவியே, என் ஆறுதலே. ஆமென்.

## தாழ்ச்சிக்கான ஜெபங்கள்

### பிதாவாகிய சர்வேசுரனுக்கு ஜெபம்

ஆங்காரள்ளவர்களை விரோதித்து, தாழ்ச்சியுள்ளவர்களுக்கு உமது வரப்பிரசாதத்தைத் தருகிற சர்வேசுரா, உமது திவ்ய சுதன் எங்களுக்கு உயிருள்ள விதமாய் முன்மாதிரிகை காட்டிய உண்மையான தாழ்ச்சி என்னும் புண்ணியத்தை என் மீது பொழிந்தருளும். என் ஆங்காரத்தால் உமது கோபத்தை நான் ஒருபோதும் தூண்ட விடாதேயும். மாறாக அடியேன் எப்போதும் என் தாழ்மையையும், தகுதியின்மையையும், உம்மையே முழுவதும் சார்ந்திருக்கும் அவசியத்தை-

யும் எப்போதும் நினைவில் கொண்டிருக்கச் செய்தருளும். ஆமென்.

## நம் ஆண்டவரிடம் ஜெபம்

ஓ என் மிகுந்த தாழ்ச்சியுள்ள சேசுவே, தேவரீர் என் மீது வைத்த நேசத்திற்காக உம்மையே தாழ்த்தி, சிலுவை மரணம் மட்டும் கீழ்ப்படிந்திருந்தீரே. ஒரேயொரு சிறு அவமதிப்பையும் தாங்க முடியாமல் சீற்றங் கொள்ளும் அளவுக்கு மிகுந்த ஆங்காரமுள்ளவனாக என்னை நான் காணும்போது, உம் திருமுன் நிற்கவும், உமது சீடன் என்று சொல்லிக் கொள்ளவும் எப்படித் துணிவேன்? என் பாவங்களின் நிமித்தம் நரக பாதாளத்தில் தள்ளப்பட அநேக சந்தர்ப்பங்களில் தகுதியுள்ளவனாக இருந்திருக்கிற நான், உண்மையில் எப்படி ஆங்காரமுள்ளவனாய் இருக்கக் கூடும்? இருதயத்தில் தாழ்ச்சியும் சாந்தமுமுள்ள சேசுவே, எனக்கு உதவி செய்து, தேவரீரைப் போல என்னை மாற்றியருளும்.

என் பேரில் வைத்த சிநேகத்திற்காக தேவரீர் எவ்வளவோ அவமானங்களையும், காயங்களையும் சுமந்தீர். நானும் உமது சிநேகத்திற்காக, எனக்கு வரும் புறக்கணிப்புகளையும், அவமானங்களையும் பொறுமையோடு தாங்கிக் கொள்வேன். ஆயினும், ஓ என் சேசுவே, என் சிந்தனைகளில் நான் எவ்வளவு ஆங்காரியாய் இருக்கிறேன் என்றும், என் வார்த்தைகளில் ஏளனமும், இகழ்ச்சியுமுள்ளவனாய் இருக்கிறேன் என்றும், என் செயல்களில், உலக மகிமையின் மீது எவ்வளவு ஆர்வமுள்ளவனாய் இருக்கிறேன் என்றும் நீர் காண்கிறீர். மெய்யான இருதயத் தாழ்ச்சியையும், என் சொந்த ஒன்றுமில்லாமையைப் பற்றிய தெளிந்த அறிவையும் எனக்குத் தந்தருளும். உம் பேரிலுள்ள சிநேகத்திற்காக, நிந்திக்கப் படுவதில் அகமகிழ்வேனாக. எனக்கு மேலாக பிறர் தெரிந்து கொள்ளப் படும்போது வன்மம் கொள்ளாதிருப்-

பேனாக. புகழப்படும்போது ஆங்காரத்தினால் நிரப்பப் பட தேவரீர் என்னை அனுமதியாதேயும். மாறாக, உமது பார்வையில் உயர்ந்தவனாயிருப்பதையும், சகலத்திலும் உம்மைப் பிரியப்படுத்துவதையும் மட்டுமே நான் ஆசித்துத் தேட எனக்கு அருள்வீராக. ஆமென்.

## உலகப் பொருட்களின் மீது பற்றின்மை வேண்டி ஜெபம்

ஓ என் சேசுவே, தேவரீர் எளிமையுள்ள, மறைந்த ஜீவியத்தைத் தெரிந்து கொண்டீரே. இந்த உலகத்தின் கடந்து போகிற காரியங்களில் என் இருதயத்தைப் பற்றின்றி பாதுகாத்துக் கொள்ள எனக்குத் தேவையான வரப்பிரசாதத்தைத் தந்தருளும். இதுமுதல் தேவரீர்தாமே என் ஒரே பொக்கிஷமாக இருப்பீராக. ஏனெனில் நீர் மற்ற சகல உடைமைகளுக்கும் மேலாக, எல்லையற்ற விதமாய் விலையேறப் பெற்றவராயிருக்கிறீர். என் இருதயம் கடந்தோடி மறைகிற, வீணான உலகப் பொருட்களின் மீது மிகவும் நாட்டங் கொண்டிருக்கிறது. "ஒருவன் உலகமெல்லாம் தனதாக்கிக் கொண்டாலும், தன் ஆத்துமத்தை இழந்தால், அவனுக்கு வரும் பயன் என்ன?" என்ற உம் எச்சரிப்புள்ள வார்த்தைகளை நான் எப்போதும் நினைவுகூரச் செய்தருளும். அடியேன் இந்த உலகத்தின் ஒன்றுமில்லாமையை நிந்தித்து, உம்மையே என் சகல ஆசைகளுக்கும், நாட்டங்களுக்குமுரிய மையப் பொருளாகக் கொண்டிருக்கும்படியாக, என் கண்களுக்கு முன்பாக எப்போதும் உமது பரிசுத்த முன்மாதிரிகையைக் கொண்டிருக்க எனக்கு வேண்டிய வரப்பிரசாதத்தைத் தந்தருளும். ஆமென்.

# பரிசுத்ததனத்திற்கான ஜெபங்கள்

### அர்ச். சூசையப்பரிடம் ஜெபம்

கன்னியர்களின் பாதுகாவலரும், பரிசுத்த தகப்பனுமான அர்ச். சூசையப்பரே, மாசற்றதனமாகவே இருக்கிற கிறீஸ்து சேசுவும், கன்னியர்களில் உத்தம கன்னிகையான மாமரியும் உமது பிரமாணிக்கமுள்ள கண்காணிப்பில் ஒப்படைக்கப் பட்டார்களே. சேசு, மரியாயாகிய இந்த வாக்குத்தத்தங்களின் வழியாக, அடியேன் சகல அசுத்ததனத்தினின்றும் பாதுகாக்கப் பட்டு, கறையற்ற மனத்தோடும், மாசற்ற இருதயத்தோடும், கற்புள்ள சரீரத்தோடும், எப்போதும் மிகப் பரிசுத்த கற்புள்ள விதமாய் என் ஜீவிய காலம் முழுவதும் சேசுநாதருக்கும், மாமரிக்கும் ஊழியம் செய்யும் வரத்தை எனக்குப் பெற்றுத் தரும்படி, உம்மை மன்றாடுகிறேன். ஆமென்.

### அர்ச். ஞானப்பிரகாசியாரிடம் ஜெபம்

சம்மனசுக்கொத்த புண்ணியங்களால் அலங்கரிக்கப் பட்டவரான அர்ச். ஞானப் பிரகாசியாரே, என் மனத்தினுடையவும், சரீரத்தினுடையவும் கற்பை மிகுந்த ஆவலோடு உம்மிடம் கையளிக்கிறேன். சம்மனசுக்கொத்த உமது பரிசுத்ததனத்தின் வழியாக, நீர் மாசற்ற செம்மறிப் புருவையாகிய சேசு கிறீஸ்து நாதரிடமும், அவருடைய மகா பரிசுத்த தாயாரும், கன்னியர்களுக்குள்ளே அர்ச். கன்னிகையுமாகிய மாமரியிடமும் என்னைக் கையளித்து, சகல கொடிய பாவங்களிலிருந்தும் என்னைப் பாதுகாக்க வேண்டுமென்று உம்மை மன்றாடுகிறேன். அசுத்ததனத்தின் எந்தச் சிறு புள்ளியாலும் கூட நான் என்னையே கறைப்படுத்த என்னை அனுமதியாதேயும். நான் பாவத்தின் சோதனையிலோ, அல்லது ஆபத்திலோ இருப்பதை நீர் காணும் போது, சுத்தமற்ற ஒவ்வொரு சிந்தனையையும், ஆசையையும் என் இருதயத்திலிருந்து தூர

அகற்றியருளும். என்னில் நித்தியத்தையும், சிலுவையில் அறையுண்ட சேசுநாதரையும் பற்றிய சிந்தனைகளைத் தட்டியெழுப்பியருளும். தேவ பயத்தின் ஓர் உயிருள்ள உணர்வை என் இருதயத்தில் ஆழமாகப் பதித்தருளும். உம்மோடு பரலோகத்தில் சர்வேசுரனுடைய உடைமைகளை நான் அனுபவிக்கும் படியாக, தேவ சிநேகத்தால் நான் பற்றியெரியச் செய்தருளும்; ஆமென்.

## சோம்பலையும், அசமந்தத்தையும் மேற்கொள்வதற்கான ஜெபம்

ஓ என் சர்வேசுரா, என்னுடையதைப் போல இவ்வளவு அலட்சியமுள்ள ஒரு ஜீவியத்தால் உம்மை மகிழ்விக்க முடியாது என்பதை நான் நன்கு அறிந்திருக்கிறேன். என் அசமந்தத்தினால், தேவரீர் என்மீது பொழிந்தருள ஆசிக்கிற வரப்பிரசாதங்களின் கதலை நான் அடைத்திருக்கிறேன் என்பதையும் அறிந்திருக்கிறேன். ஓ என் சர்வேசுரா, நான் தகுதியற்றவனாயிருந்தாலும், தேவரீர் என்னைத் தள்ளி விடாமல், தொடர்ந்து என் மேல் இரக்கமாயிரும். இந்த என்னுடைய பரிதாப நிலையைத் திருத்தவும், அதிலிருந்து எழுந்திருக்கவும் மிகுந்த முயற்சிகளை நான் மேற்கொள்வேன். வருங்காலத்தில் என் ஆசாபாசங்களை வெல்லவும், உமது இனிய தூண்டுதல்களைப் பின்செல்லவும் அதிகக் கவனமாயிருப்பேன். இனி ஒருபோதும் என் சோம்பலின் காரணமாக என் கடமைகளை விட்டு நான் விலகாமல், அதிக விழிப்போடும், பிரமாணிக்கத்தோடும் அவற்றை நிறைவேற்றப் பாடுபடுவேன். சுருங்கச் சொன்னால், இந்நேர முதல், உம்மைப் பிரியப்படுத்த என்னால் முடிந்த சகலத்தையும் செய்வேன். உமக்கு சந்தோஷம் வருவிப்பதாக நான் அறிந்திருக்கிற எதையும் நான் அசட்டை செய்ய மாட்டேன்.

ஓ என் சேசுவே, தேவரீர் உமது வரப்பிரசாதங்களை என்

மீது பொழிவதில் வெகு தாராளமாய் இருந்திருக்கிறீர்; உமது திரு இரத்தத்தையும், உமது உயிரையும் கூட எனக்காகக் கையளிக்கத் திருவுளமானீர். சகல மகத்துவத்திற்கும், நேசத்திற்கும் பாத்திரமாயிருக்கிற உம் மட்டில் இவ்வளவு குறைவான நேசங் காண்பித்ததற்காக வருந்துகிறேன். ஆயி-னும், ஓ என் சேசுவே, என் பலவீனத்தைத் தேவரீர் அறிந்-திருக்கிறீர். உமது வல்லமையுள்ள வரப்பிரசாதத்தால் எனக்கு உதவியருளும். உம்மில் என் நம்பிக்கையை வைக்கிறேன்.

ஓ அமலோற்பவக் கன்னி மரியாயே, என்னையே நான் மேற்கொள்ளவும், ஒரு அர்ச்சியசிஷ்டவனாக ஆகவும் எனக்கு உதவுவீராக. ஆமென்.

## தீய பழக்கங்களுக்கு அடிமையாக இருக்கிற ஓர் ஆத்துமத்தின் ஜெபம்

ஓ என் சர்வேசுரா, உமது திருப்பாதங்களண்டையில் விழுந்து கிடக்கிற அடியேனைக் கண்ணோக்கியருளும். உமது இரக்கத்தைப் பெற்றுக்கொள்ள நான் தகுதியற்றவன். ஆயினும், என் இரட்சகரே, எனக்காகத் தேவரீர் சிந்திய திரு இரத்தம் என்னை ஊக்குவித்து, அதன் மீது நான் நம்பிக்கை கொண்டிருக்க என்னைத் தூண்டுகிறது. எவ்வளவு அடிக்கடி உமக்கெதிராக நான் குற்றம் செய்திருக்கிறேன்! ஆயினும் இப்போது திரும்பவும் அதே பாவத்திற்குள் நான் விழுந்திருக்கிறேன்.

ஓ என் சர்வேசுரா, நான் திருந்த விரும்புகிறேன். உமக்குப் பிரமாணிக்கமாக இருக்கும்படியாக, என் நம்பிக்கை எல்லாம் உம்பேரில் வைக்கிறேன். நான் சோதிக்கப்படும் போதெல்-லாம், உடனடியாக உமது அடைக்கலத்தைத் தேடுவேன். இது வரையிலும் அடியேன் என் சொந்த வாக்குத்தத்தங்-

களையும், பிரதிக்கினைகளையும் நம்பியவனாக, என் சோதனைகளில் உமது அடைக்கலத்தில் என்னை ஒப்புவிப்பதை அசட்டை செய்து வந்தேன். திரும்பத் திரும்ப என் தோல்விகளுக்கு இதுவே காரணமாக இருந்திருக்கிறது. இந்த நாள் முதல், ஓ என் ஆண்டவரே, நீர்தாமே என் பலமாயிருப்பீராக. இவ்வாறு எல்லாக் காரியங்களையும் செய்வது என்னால் கூடுமாயிருக்கும். ஏனெனில், என்னைத் திடப் படுத்துகிறவரைக் கொண்டு சகலத்தையும் செய்ய என்னால் கூடும்.

## மட்டுமிதமின்மை, அல்லது அசுத்ததனம் போன்ற ஏதாவது ஒரு தீமையை வெல்ல ஜெபம்

அப்போஸ்தலராகிய முத்திப்பேறு பெற்ற இராயப்பரின் விலங்கை முறித்து, எந்தத் தீங்குமின்றி அவரை வெளி வரச் செய்தவரான சர்வேசுரா, ........... என்னும் தீமையின் (இதன் வகையைக் குறிப்பிடவும்) அடிமைத்தளையால் பிணைக்கப் பட்டிருக்கிற உமது ஊழியனாகிய ............. (பெயரைக் குறிப்பிடவும்) கட்டுக்களை அவிழ்த்தருளும். அதே அப்போஸ்தலரின் பேறுபலன்களின் வழியாக, அதன் கொடுங்கோன்மையினின்று காப்பாற்றப்பட எனக்கு (அவனுக்கு, அவளுக்கு) தயை செய்தருளும். என்னுடைய (அவனுடைய, அவளுடைய) இருதயத்திலிருந்து சரீர இன்பங்கள், தடையற்ற இன்ப நுகர்ச்சி ஆகியவற்றின் மீதான அளவுக்கதிகமான நேசத்தை அகற்றியருளும். இதனால், உணர்ச்சிகளுக்கு அடிமையாகாத சமநிலையோடும், பக்தியோடும், நீதியோடும் வாழ்ந்து, தேவரீரோடு அடியேன் நித்திய ஜீவியத்தை அடைந்து கொள்வேனாக. ஆமென்.

## கெட்ட சிந்தனைகளுக்கு எதிரான ஜெபம்

சர்வ வல்லவரும், பூரண தயையுள்ளவருமாயிருக்கிற சர்வேசுரா, எங்கள் ஜெபங்களை ஆதரவாய்க் கண்ணோக்கி, இஸ்பிரீத்து சாந்துவின் தகுதியுள்ள வாசஸ்தலங்களாக

மதிக்கப்பட நாங்கள் தகுதி பெறும்படியாக, கெட்ட சிந்தனைகளின் சோதனைகளிலிருந்து எங்கள் இருதயங்களை விடுவித்தருளும். உமது மகத்துவத்திற்குத் தகுதியானதும், உமக்குப் பிரியமானதுமாகிய நினைப்புகளையே எப்போதும் நாங்கள் சிந்தித்துக் கொண்டிருக்கவும், எப்போதும் நேர்மையான மனங்களோடு தேவரீரை நேசிக்கவும் தக்கதாக, உமது வரப்பிரசாதத்தின் ஒளியை எங்கள் இருதயங்களின் மீது பொழிந்தருளும். எங்கள் ஆண்டவராகிய சேசு கிறீஸ்துநாதர் வழியாக. ஆமென்.

## பாவங்களிலிருந்து விடுவிக்கப்படும்படியாக ஜெபம்

யாரையும் தள்ளி விடாதவரும், உமது கனிவுள்ள இரக்கத்தில், மிகப் பெரும் பாவிகளின் மனந்திரும்புதலால் சினம் தணிகிறவருமாயிருக்கிற சர்வேசுரா, எங்கள் தாழ்மையான ஜெபங்களைத் தயவோடு ஏற்றுக் கொண்டு, உமது கற்பனைகளை நிறைவேற்ற எங்களால் இயலும்படியாக, எங்கள் இருதயங்களை ஒளிர்வித்தருளும். எங்கள் ஆண்டவராகிய கிறீஸ்து நாதர் வழியாக. ஆமென்.

## சர்வேசுரன் அறிந்திருக்கிறார்

சேசுவே, மிகக் கடினமான வேளையில்,
சரீரம் சோர்ந்திருக்கும் போது,
மனம் மேகங்களால் சூழப் பட்டிருக்கும்போது,
ஆத்துமம் குழப்பம் அடைந்திருக்கிற போது,
எனக்கே நான் பெரும் சுமையாய் இருக்கும்போது,
மற்றவர்களுக்கு நான் துர்மாதிரிகையாய் இருக்கும்போது,
என் மிகச் சிறந்த நண்பர்கள் எனக்கு எதிராக இருப்பதாகத் தோன்றும் போது,
ஒவ்வொரு கதவும் மூடப் படும் போது:

அப்போது என்னையே நான் நினைவுகூரச் செய்யும்,
நான் யார், என் தகுதி என்ன,
மிதிக்கப்பட மட்டுமே தகுதியுள்ள என் ஒன்றுமில்லாமை,
சற்றும் நம்பத் தகாத என் நிலையற்ற சுபாவம்,
மேலதிகத் தண்டனைக்குப் பாத்திரமான என் பாவத் தன்மை,
தன்னையே எப்போதும் தேடுகிற என் சுய நேசம்,
சம அந்தஸ்திலுள்ள மற்றவர்கள் மட்டில் என் கொடூர குணம்,
இவை அனைத்திலும் உமது திருக்கரத்தை நான் காணச் செய்தருளும்.

நீர் யார், உமக்குரிய தகுதி என்ன,
ஆயினும் பிரதியுபகாரமாக எதை நீர் பெற்றிருக்கிறீர் என்று உம்மைப் பற்றி நான் நினைவுகூரச் செய்யும்.
உம்மில் பாவமுண்டென எவனும் குற்றஞ்சாட்ட இயலாது.
ஆயினும் அநேகருக்கு இடறலாய் நீர் இருக்கக் கண்டீர்.
நீர் நெரிந்த நாணலை முறியாதவர்.
ஆயினும் உம் ஆத்துமம் மரணமட்டும் துக்கமாயிருந்தது.
எனக்காக அவமானங்களை ஏற்றுக் கொண்டு,
சிலுவையை அனுபவித்தீர்.

பிரமாணிக்கமுள்ளவரும்,
என்னால் தாங்க இயல்கிற அளவுக்கு மேல் என்னைச் சோதியாதவரும்,
ஒருகோடி முனை முதல் மறு கோடி முனை வரை வல்லமையோடு ஆட்சி புரிகிறவரும்,
சகலத்தையும் இனிமையாக நடத்தி முடிக்கிறவரும்,
தீமையிலிருந்து நன்மை விளையச் செய்கிறவரும், இனியவரும், மென்மையானவரும்,
தம்மை நேசிக்கிற சகலருக்கும் மிகுந்த இரக்கம்

*காண்பிக்கிறவருமாகிய*
*என் பிதாவை நான் நினைவுகூர்வேனாக.*
*--அதிமேற்றிராணியார் கூடியர், சே.ச.*

### வரப்பிரசாதத்திற்காக ஜெபம்

ஓ என் சர்வேசுரா, உமது பிள்ளைகளில் ஒருவனாகத் தேவரீர் என்னை ஏற்றுக் கொள்ளும்படியாக, ஜென்மப் பாவத்திலிருந்து என்னைக் கழுவி, முதல் தடவையாக என் இருதயத்திற்குள் உமது வரப்பிரசாதத்தைப் பொழிந்தருளிய அந்தக் கணத்தை நினைத்தருளும். ஓ என் சர்வேசுரா, என் பிதாவாயிருக்கிற தேவரீர், உமது எல்லையற்ற இரக்கப் பெருக்கத்தில், சேசு நாதருடைய பேறுபலன்கள், அவருடைய திரு இரத்தம் ஆகியவற்றின் வழியாகவும், தேவ தாய் கன்னி மாமரியின் வியாகுலங்களின் வழியாகவும், இந்த நாளில் உமது அதிமிக மகிமைக்காகவும், என் இரட்சணியத்திற்காகவும் நான் பெற்றுக் கொள்ள வேண்டுமென நீர் விரும்புகிற வரப்பிரசாதங்களை எனக்குத் தந்தருளும். ஆமென்.

ஓ நேச இருதயமே, என் நம்பிக்கையை எல்லாம் உமது பேரில் வைக்கிறேன்; என் பலவீனத்தைப் பற்றி நான் அச்சப் படுகிறேன். ஆயினும் உமது நன்மைத்தனத்தினின்று எல்லாவற்றையும் பெற்றுக் கொள்வேன் என்று நம்புகிறேன்.

ஓ மகா பரிசுத்த கன்னி மரியாயின் மாசற்ற திரு இருதயமே, சேசுநாதரிடமிருந்து ஒரு பரிசுத்தமும், தாழ்ச்சியுமுள்ள இருதயத்தை எனக்குப் பெற்றுத் தாரும். ஆமென்.

## ஏழு தலையான பாவங்கள்

இந்தச் சிறுநூலிலுள்ள ஏதாவது ஒரு பகுதி தன்னைப் பற்றியே இருப்பதாக ஒவ்வொருவரும் காண்பார்கள். ஏனெனில் ஆங்காரம், உலோபித்–தனம், மோகம், கோபம், போசனப் பிரியம், காய்மகாரம், சோம்பல் ஆகிய ஏழு வேர்களில் இருந்துதான் சகல மனிதப் பாவங்களும் பிறந்து வருகின்றன. இந்தப் புத்தகம், நம் ஏழு முக்கியமான பாவ நாட்டங்களாகவும் இருக்கிற இந்த ஏழு தலையான பாவங்களின் தன்மை, அளவுகள், செயல்கள் மற்றும் அவற்றிற்கிடையே உள்ள தோடர்புகள் ஆகியவற்றைப் பற்றி விளக்கிக் கூறுகிறது. அவற்றின் பல்வேறு வடிவங்களையும், அவை போட்டுக் கொள்ளும் மாறுவேடங்களையும் இந்நூல் வெளிப்படுத்துகிறது. உதாரணமாக, ஒவ்வொருவனும் ஆங்காரம் என்னும் தீமையால் பாதிக்கப் பட்டிருக்கிறான் என்று சொல்கிறது. மேலும் ஒரு பாவியின் தனிப்பட்ட மனநிலையைச் சார்ந்து, ஆங்காரத்தின் 15 மாறுபட்ட மாறுவேடங்களையும் குறித்துக் காட்டுகிறது.

இந்தப் பாவங்களுக்கு எதிரான தீர்வுகளையும், பாதுகாப்பு நடவடிக்கைகளையும் கூட இந்தச் சிறுநூல் தருகிறது. மேலும் அவற்றை வெல்வதற்கான விசேஷ ஜெபங்களும் இதில் சேர்க்கப் பட்டுள்ளன. மொத்தத்தில், நம் ஏழு முக்கியமான மனிதப் பலவீனங்களின் சாராம்சத்தையும், அவற்றிற்கெதிராகப் போரிட்டு வெல்வது எப்படி என்பதையும் புரிந்து கொள்ள உதவுகிற மிகுந்த வல்லபமுள்ள கருவியாக இந்நூல் இருக்கிறது. இது மிகச் சிறந்த ஞான வெளிச்சம் தருகிற, முக்கியமான புத்தகமாக இருக்கிறது. ஏனெனில் நம் எஞ்சிய வாழ்வு முழுவதும் நாம் ஈடுபட வேண்டிய போராட்ட வியூகங்களை இந்நூல் வகுத்துத் தருகிறது. இந்த ஏழு தலையாய பாவங்களால் நாம் வஞ்சிக்கப் பட நம்மையே அனுமதியாமல், சர்வேசுரனுக்கு ஊழியஞ் செய்து நம் ஆத்துமங்களைக் காத்துக் கொள்ள விரும்பினால், நாம் ஒவ்வொருவரும் இந்த ஏழு பாவங்களுக்கு எதிராக இடையறாமல் போராட்டம் நடத்துவது நமக்கு மிக அவசியமாக உள்ளது.